(இ-ள்.) பனியாம்- பனியினாலாகிய—கட்டி- கட்டியானது—வெம்மையால் சூரியகிரணத்தினால்— கரைந்துபோங்கணக்கெ-கரைந்து (சலமாகின்ற) முறைமைபோல— மெய்ஞ்ஞானதிருஷட்டிநோக்கலும்- (உனது) மெய்ஞ்ஞானநோக்குறித்துப்பார்ப்பதினாலும்— வாதனைவிடுதலும்-வாசனையைவிடுதலினாலும்— துலமாமுடல்விட்டு- ஆதிபௌதிக சரீரத்தைவிட்டு— நிட்டமாகிய சூக்கமெய்- நிவ்வரமானவாதிவாகிகசரீரம் — நிலைபெறும் - நிலையாகநிற்கும்—சிவன்முத்தியுமாகும்- சிவன்முத்திடமாம்—முட்டஞானமெநிறையும் - பூர்ணஞானமே நிறையும்—உன்றிவ்வுடனிருத்தி-உனதிச்சரீரத்தை யந்நமட்டு நிறுத்தி—முற்பட்டகாலேயாய்- (ஆதிவாகிகசரீரத்தால்) முந்தின சிருஷ்டியைப் பார்ப்பாய்.-(எ-று.) [இ-ம்] ஞானதிருஷ்டியினாலாதிபௌதிகசரீரந்தொந்தாதிவாகிகசரீரமாக்கிச் சங்கற்பித்ததைப் பார்க்கவேண்டுமென்பதாம். மெய்ஞ்ஞானக்கட்டி நோக்கலும் வாதனை விடுதலுமென்பதற்குத்தாரணம்(சூதிசம்பினத) சொச்சமான சித்தவிருத்தியையடைந்து விருத்திசாக்ஷியாயிருக்கின்றவனவ்விருத்திபோய்க்கூட நிவிர்த்திக்கத்தக்கதாயிருக்கின்ற உஞ்ஞானத்தைத் தவாதுதேபுசிறலேபக்ஷிக்கின்றான். (௧௭)

(அந்தஉடையுமற்பியாசவிலக்கணம்யாதெனின்.)

என்றவாணியையத்திறனியற்றுமாறென்னெனவிவள்கேட்கத்... ※
துன்றுசிந்தையும்வசனமுமுசாவுமத்தொல்பொருட்பொருட்டா
கிநின்றவின்பமுமுதாரமுவிராகமுநிறைந்துநீள்சகமென்று-.※
மொன்றுமில்லெனக்கலைவழிபூகமாயுணர்வர்சாதகராலுளோர்....※

(இ-ள்.) என்றவாணியை-இப்படியென்றனுக்கிரகித்தசரஸ்வதியை—அத்திறன்-அர்த்தப்ரகாரம்(வர)—இயற்றுமாறென்னென-முயற்சிக்குந்தன்மையென்னவென்று—இவள் கேட்க-இந்தலீலையானவள்கேட்க—வசனமும்- சிரவணமும்—உசாவும்- மனனமும்—துன்றுசிந்தையும்- நிறைந்தநிதித்யாசனமும்—அத்தொல்-அப்பழமையான—பொருட்பொருட்டாகி - வஸ்துவினிடமான நிஷ்டையாய் —நின்றவின்பமும்- நிலையானவாநந்தமும்—உதாரமும-சகலத்தியாகமும்—விராகமும்- நிராசையும்— நிறைந்து-பூரணமாய்—நீள்சகம்- நீண்டவுலகமென்பது —என்றும் - எப்பொழுதும்—ஒன்றுமில்லென - ஒன்றுமில்லையென்று —கலைவழி-வேதநூல்மார்க்கத்தினால்--பூகமாய்-யுத்தியாய் --சாதகராலுளோர்-அற்பியாசியானவர்கள்--உணர்வர்- (அனுபவமா) யறிவார்கள்.--(எ-று.) [இ-ம்] இந்திரியமுதலியகரணங்களியாவவுமடங்கி

ள்—ஒரு பீறு-வரிசையாக—விண்-ஆகாயத்தில்—உழல்வுற்று-சு
ழன்று—(எ-று.) (௪௨)

( இதுவுமது. )

களிகொளுடைத்திடாகினித்திரள்களுங்காற்பிறழ்ந்திரிகின்ற ... *
வெளிமுகிலைகடந்தவரிலாமனையினடமேவிவீணை ... *
தெளியுநாரதத்துடைப்பருகானமுஞ்சித்திரத்திரிதமே ... *
துளிகொள்கற்பகத்தின்முகில்களுமாதர்தந்தொகுதியும் ... ளதாகி.*

(இ-ள்.) களிகொளுடைத்து- களிப்புள்ள நிருத்தத்தையுடைய—டாகினித்திரள்களும்- டாகினிக்கூட்டங்களும்—காங்கர் நற்பிறழ்ந்திரிகின்ற-வேகமுள்ள வாயுவினாற் சஞ்சரிக்கின்ற—வெளிமுகிலைகளும்- வெண்மையானமேகங்களும்—சுவரிலாமனையிடமேவி -சுவரில்லாத வீட்டிற்பொருந்தி—வீணையின்பாடல்- வீணைகானத்தில்—தெளியும்-தெளிகின்ற—நாரதத்துடைப்பருகானமும்- நாரதர் தும்புருகானங்களும்—தோட்டியம் -எழுதப்பட்ட—சித்திரத்தின்- சித்திரதலைதிப்போல—இல்- (சந்த) மில்லாமல்—துளிகொள்- வருஷிக்கின்ற—கற்பகத்தின்முகில்களும் -கற்பாந்தமேகங்களும்—மாதர்தந்தொகுதியும்- மகளிர்கூட்டங்களும்—உளதாகி -உண்டாகி—(எ-று.) (௪௩)

( இதுவுமது. )

எல்லையின்றியயோசனைதூரங்களியார்க்குமெய்தரிதாகிக்... ...*
கல்லையொத்தறவிறுகுறத்திரண்டநீள்காரிருளுடைத்தாகி .. [ய்ச்
யொல்லையோடுதேரிரவிடுங்கனலுமேயொப்பதாமொளியுண்டா
சொல்லுமித்திரனியாவையும்பற்பலவிடந்தொறுந்தொடர்வுற்று

(இ-ள்.) எல்லையின்றிய- அளவில்லாத—யோசனைதூரங்கள்-பதின்காதைதூரங்களில்—இயார்க்கு மெய்தரிதாகி - எவர்க்குமடையக்கூடாததாகியும்—கல்லையொத்து -பாடாணத்துக்கொப்பாய்—அற-மிகவும்—இறுகுறத்திரண்ட-கெட்டியாகத் திரண்டிருக்கின்ற—நீள்காரிருளுடைத்தாகி-மிகுந்தகருமையானவிருளையுடையதாயும்— ஒல்லையோடு- சீக்கிரமாகச்செல்கின்ற—தேரிரவியும்-இரதத்தையுடையசூரியனும்—கனலும்- அக்கினியும்—ஒப்பதாம்—சமானமாகிய—ஒளியுண்டாய் -பிரகாசத்தையுடையதாயும்—சொல்லும்-சொல்லப்பட்ட—இந்திரன்யாவையும்- இக்கூட்டங்களியாவையு (முடைய)—பற்பலவிடந்தொறும்-பலபல

( இதுவுமது. )

கொசுகின்டிரளத்தியின்காயிடைக்குமுறுவதெனவெங்குஞ்...*
சதுமுகன்றருமுயிரெலாமவையுறுந்தன்மைமூன்றுலகுண்டா.*
மதுலவானகங்கடந்தனர்மீட்டுமோரவனியின்வரவெணிப்...*
பதுமவண்டத்தைநீக்கிவேறண்டத்திற்பருப்பதநகர்புக்கார்....*

(இ-ள்.) கொசுகின்டிரள்-கொசுகின்பெருங்கூட்டங்கள்—அத்தியின்காயிடை- அத்திக்கனியினிடத்தில்—குமுறுவதென- சப்திப்பதுபோல—எங்கும்-எவ்விடங்களிலும்— சதுமுகன்றரும்-பிரமனுண்டாக்கிய—உயிரெலாம்-ஜீவர்களியாவும்—அவையுறுந்தன்மை-சேர்ந்திருக்குங்குணமுள்ள—மூன்றுலகுண்டாம்-திரிபுவனங்களையுடைய— அதுலவானகங்கடந்தனர்- சமானமில்லாத வாகாயத்தைத்தாண்டினார்—மீட்டும்-திரும்பவும்—ஓரவனியின் வரவெணி-ஒருபூமியைச்சேரச்சிந்தித்து—பதுமவண்டத்தை நீக்கி- பிரமாண்டத்தைக்கடந்து— வேறண்டத்தில்- வசிட்டனிருந்தலோகத்தில்—பருப்பதநகர்புக்கார் - கிரிக்கிராமமென்னும்பட்டணத்தை யடைந்தார்கள்.-(எ-று.) [இ-ரு-க-ம்] ஆத்மவியாபகத்திலுண்டான ஸ்புரணவிசித்திரங்களை யதுதானேபார்த்ததிசயித்ததாம். (௬௫)

(புத்திரசோகங்காண்டல்-வேறு)

வினையர்சுற்றமுந்தனையருந்துக்கமாய்வெம்பு ... ... ... ... *
மனையவேதியன்மனையுற்றார்கண்ணிலனாகா ... ... ... ...*
ரினையபோதின்மெய்ச்சங்கற்பமெய்தியவிலை... ... ... ... ... *
மனையுளோரெமைக்காண்கெனச்சங்கற்பம்வகுத்தாள் ... ... *

(இ-ள்.) வினையர்-ஏவற்காரரும்—சுற்றமும்- உறவினரும்—தனையரும்-புத்திரரும்— துக்கமாய்வெம்பும்- துன்பமாகவாடுகின்ற— அனையவேதியன்- அப்பிராமணனது—மனையுற்றார்-வீட்டிலுறைந்தவர்கள்—கண்ணிலனாகார்- (அவர்களுக்)கதிரிஸ்யமாயிருக்கும்—இனையபோதில்- இப்படிப்பட்டசமயத்தில்—மெய்ச்சங்கற்பம்-சத்தியசங்கற்பத்தை—எய்தியவிலை- அடைந்தவிலையாளவள்—மனையுளோர்-வீட்டின்கணுள்ளவர்— எமைக்காண்கென-எங்களைப்பார்க்கக்கடவார்களென்று — சங்கற்பம்வகுத்தாள்- சங்கற்பஞ்செய்தாள் -(எ-று.) (௬௬)

(துக்கநிவிர்த்திசெய்தல்-வேறு.)

பூமகளுமலைமகளும்போல்வாளாவனதெய்வம்போலுமென்றே*
நாமவர்கண்டருச்சித்தார்தலைமகன்பார்த்தெமதல்லறாதையமா

செய்தபெருமைத்தாமோ, பருமவுடலுடைவதென்றென்னவி
ப்போதிப்பவிவைபட்டால் அற்புதமவையெனக்கல்மாகளித்தலுமே
ற்றவத்தொருவனறைவுகாறேன். ................................ *

(இ-ள்.) இதுபுகல - இவ்(வனுபவத்தைப்) போதிக்க — கேட்டனள் - சிவனருஞ்செய்தவிப்பிரதன் — எனையடைந்தோர்களும் - என்னை(யாசகமா)யடைந்தவர்களும் — வேண்டிப்பெய்தாநிற்பர் - வேண்டியதைப்பெறுவார்கள் — பருமணிநேருநைய - பருமையான (சித்த) மணியையொத்தவர்களே — பணிந்து - வணங்கி — புகழ்ந்தன் - தோத்திரஞ்செய்தவருகியநான் — வேண்டியசெய்தல் - (அடைய) வேண்டியதனைத்தும் — பருமைத்தாமோ - ஆச்சரியமாமா — பருமவுடலுடைவதென்றென்ன - (மூற்) பருமசரீரத்தையுடையவனென்றுகேட்க — இப்போதிப்பவிவை - இந்தயுத்திமிப்பாட்டு — பட்டால - மிகுந்தால் — அற்புதவவையென - அச்சரியமுடையவாமென்று — கல்மாகளித்தலும் - சரஸ்வதியனுக்கிரகிக்கவும் — மேற்றவத்தொருவன் - மேல்வீட்டிலொருவன் (வந்து) — அறைவுகாறேன் - சொல்லத்தொடங்கினான். (எ-று.) (௬௫)

(முப்பவமடைந்தகேதுவானசரித்திரமுறைத்தல்.)

அப்புமழைசொரிந்துவருமடர்சேனைக்கடலெங்குமடர்ந்துநிற்க,
வெப்புடையகனற்கொழுந்தாலந்நகரஞ்சாம்பராய்வேகாநின்ற
திப்புதுமைகண்டிலைகொல் இகல்வேந்தேயென்பளவில் இறைஞ்சார்
சேனை, முப்புவனங்களுநடுங்கமோகரிக்குமோசைசெவிமடுகக்
கேட்டான். ................................ *

(இ-ள்.) அப்புமழைசொரிந்துவரும் - அம்புவருடஞ் சொரிந்து வருகின்ற — அடர்சேனைக்கடல் - நிறைந்த சேனாசமுத்திரமானது — எங்குமடர்ந்துநிற்க - எவ்விடத்துநிறைந்திருக்க — வெப்புடைய - வெம்மையாகிய — கனற்கொழுந்தால் - அக்கினிச்சுவாலையினால் — அந்நகரம் - அப்பட்டணம் — சாம்பராய்வேகாநின்றது - சாம்பலாகவேகின்றது — இப்புதுமை - இவ்வதிசயத்தை — கண்டிலைகொல் - காணவில்லையோ — இகல்வேந்தே - பலம்பொருந்தியவரசனே — என்பளவில் - என்றுசொல்லுஞ்சமயத்தில் — இறைஞ்சார்சேனை - பகைவர்படையானது — முப்புவனங்களுநடுங்க - மூன்றுலகங்களுநடுங்கும்படி — மோகரிக்குமோசை - கெர்ச்சிக்கின்றசப்தத்தை — செவிமடுக்கக்கேட்டான் - காதுசெவிபட (அரசன்) கேட்டான். (எ-று.) (௬௬)

(இதுவுமது.)

ஒட்டலர்சேனையின் முழக்குமலைந்தலறு நகரொலியுமுருமேறெ
ன்ன, முட்டியெழவடவனல்போல் முழங்கனலின்புகைமேய்ந் தமு
டிக்கொள்ள, கெட்டனகண்களுஞ்செவியுங்கிளர்நகரமழிந்ததுவி
க்கேடியாவுந், திட்டமுறலீலையுமாவாணியும்வேந்துமமைந்திரியுந்தெரி
யக்கண்டார்.......................................................................*

(இ-ள்.) ஒட்டலர்- சத்துருக்களின்---சேனையின்முழக்கும்- ப
டையினதுசப்தமும்---உலைந்தலறும்- அலைந்தலறாநின்ற---நக
ரொலியும்-பட்டணத்திலுள்ளவர்களின்சப்தமும்---உருமேறென்
ன- இடியைப்போல---முட்டியெழ- எதிர்த்தெழ---வடவனல்போ
ல்-வடவாக்கினியைப்போல---முழங்கனலின்- சப்திக்கப்பட்டவ
க்கினியினது---புகையெங்குமூடிக்கொள்ள- தூமமானதெவ்விட
த்துஞ்சூழ்ந்துகொள்ள--- கண்களுஞ்செவியும் - நேத்திரமுஞ்சு
ரோத்திரமும்---கெட்டன- அழிந்தன---கிளர்நகரமழிந்தது- ப்ர
காசிக்கின்றபட்டணமழிந்தது---இக்கேடியாவும்- இக்கேடனைத்
தையும்---திட்டமுற-ப்ரத்யக்ஷமாக---லீலையும்- லீலையும்---வாணி
யும்-சரஸ்வதியும்---வேந்தும்-அரசனும்---மந்திரியும் - அமைச்ச
னும்---தெரியக்கண்டார்-ப்ரத்யக்ஷமாகப்பார்த்தார்கள் -(எ-று.)

( இதுவுமது-வேறு. )

செருவிறல்வேந்தன்றேவிதெருமந்துநடுங்கிவந்தாள் - - *
வருமிவள்பாங்கிமன்னுமாளிகைமகளிர்யாரும் - - - *
பெருகியதிதியுங்கொண்டார்பேணலாரென்னக்கேட்டா - *
னருகுறுதேவியுங்களைக்கலமென்றுபோனான் - - - *

(இ-ள்.) செருவிறல்- யுத்தத்தில்வீரமுள்ள---வேந்தன்றேவி-அ
ரசனுடையமனைவியானவள்---தெருமந்து - பிரமித்து---நடுங்கி
வந்தாள்- நடுக்கமுற்றுவந்தாள்---வருமிவள்பாங்கி - இவளுடன்வ
ராநின்றதோழியானவள்---மன்னு- அரசனை---மாளிகைமகளிர்
யாரும்- அரண்மனையி (லுள்ள)மாதர்களனைவரையும்---பெருகிய
திதியும் - மிகுந்தநிதிகளோடும் --- பேணலார் - சத்துருக்கள்---
கொண்டாரென்ன- கொள்ளையிட்டாரென்றுசொல்ல---கேட்
டான்-(அதைக்)கேட்டவிப்ரவாசன்---அருகுறு தேவி-என்பக்க
த்திலுள்ளதேவியானவள்--- உங்களைக்கலமென்றுபோனான் -உ
ங்களைக்கலமென்றுசொல்லிபுத்தத்துக்குப்போயினான்.(எ-று.

(லீலைவசுவமாகவேவந்தபுதியலீலையின்காரணம்விளைவுதல்.)

எரிந்திழவபோலவந்தலீலையையிந்தலீலை - - - - - *
யதிசயமெய்திநோக்கியருங்கலைமாதைநோக்கி - - - *

சுழுத்தி - சுழுத்தியுமாகிய — எல்லாம் - இவைகளனைத்தும் — ஏகப
ரூற்றப்பொருந்த -- ஒன்றினுள் - ஒன்றினிடத்தில் — ஒன்றுக்கொ
ன்று-ஒன்றிலாதபடியிருவ் — இல்லை - இல்லையென்பது — உண்டெ
ன்ன - உள்ளதென்பது --- மாசுறுமயக்கமட்டே - சங்கமுற்றபிர
மையினாலேயே — பட்டறங்காராதின்றது - அளவின்றிவிருத்தியாகி
ற்று — ஆசறுமனுபவங்கள் - குற்றமற்றவனுபவங்களானவை -
யுடனாக - இரண்டுவிதமாம் — அவற்றைக்கேட்டாய் - அவைக
ளைக்கேள் — (எ-று.) [இ-ம்] மயக்கத்தினுண்டான சத்தாவத்தை
புறியபற்றனவென்பதாம். (௭௧)

( இதுவுமது. )

முன்னனுபவத்துக்கேற்றமுறைமையாய்ச்சிலவதோன்றும்.... *
பின்னுருபுதுமைத்தாகிப்பேதமாய்ச்சிலவதோன்று - *
நின்னுடனின்னாசாரநின்றலைநின்னொழுக்க - - - - - *
மென்னவேறன்றிநின்றாளெதிர்நிழல்போலலீலை - - - *

(இ-ள்.) முன்னனுபவத்துக்கேற்ற - முன்னனுபவத்துக்குத்தக்க
தற்ற — முறைமையாய் - முறையாக — சிலவைதோன்றும் - சிலவு
ண்டாயிருக்கும் — பின்னுருபுதுமைத்தாகி - பின்புள்ளநூதனமா
கி — பேதமாய்ச்சிலவதோன்றும் - பேதமாகச்சிலவுண்டாயிரு
க்கும் — (ஆகையால்) நின்னுடல் - உனதுவடிவம் - நின்னாசாரம் -
உனதாசாரம் — நின்றலை - உனதுதலை --- நின்னொழுக்கம் - உன
துநடை — என்ன - என்னும்படி -- லீலை - (இந்த) லீலையனவள் — எ
திர்நிழல்போல - முன்னேற்றியவனதுநிழலைப்போல — வேறன்றி
நின்றாள் - பேதமில்லாமலிருந்தாள். - (எ-று) [இ-ம்] பாவனாபிரகா
ரமுன்னனுபவத்திற்கொத்தவண்ணம்புதியலீலை தோற்றினளென்
பதாம். (௭௨)

(புதியலீலைவினாவுதல்.)

புரவலனினைவாலுன்னைப்போலிவடோன்றிநின்றாள் ... ... *
விரவுயிப்போரிற்பட்டுவிரேதன்பதுமனென்று ... ... *
நரபதியாகுமென்றநாமகள்வசனங்கேட்டு ... ... ... *
பரவினபுதியலீலைபணிந்திதுபகர்வதானாள் ... ... ... *

(இ-ள்.) புரவலனினைவால் - இராசாவினினைவினால் — உன்னைப்
போல் - நின்னைப்போலவே — இவடோன்றிநின்றாள் - இவளுருவங்கொண்
டாள் — விரவுயிப்போரிற்பட்டு - கலந்தவிந்த யுத்தத்திலிறந்து
--விரேதன் - விரேதனானவன் — பதுமனென்னுநரபதியாகுமெ
ன்ற - பதுமனென்கின்றவாசனாவனென்றுசொல்லிய — நாமகள்வ
சனங்கேட்டு - சரஸ்வதியினதுவாக்கியத்தைக்கேட்டு — பரவினப

யலீலை-பகழ்ந்த நாதனை லீலையானவள்—பணிந்து பகர்வதாஞ்
?-வணக்கியிதைச்சொல்லத் தொடங்கினள் —(எ-று.) (௭௩)

(புதியலீலைவிரும்பின வரத் ... தேவியனுக்கிரகித்தல்.)

பண்டுநான்பூசைசெய்தபாமகள்போலுநீயே... ... ... ... ...*
விண்டவராலென்காந்தன்வீழுறலுறைவதெங்கே... ... ... ...*
கண்டுநானங்கேயிந்தக்காயத்தொடேகிவாழத் ... ... ... ...*
தண்டவில்வரநல்கென்னத்தந்தனமென்றலோமும்... ... ... *

(இ-ள்.) பண்டுநான்பூசைசெய்த-முற்காலத்திலென்பூசித்த—பாமகள்போலுநீயே- சரஸ்வதியைப்போலிருக்கின்றநீயே—விண்டவரால்-சத்துருவிருல்— என்காந்தன்விழுறல்- எனதுபருட னிறந்தால்—எங்கே- எவ்விடத்தில்—உறைவது- இருப்பதோ—கண்டு-(அதைப்) பார்த்து—நானங்கே -யானந்தவிடத்திலே—இந்தக்காயத்தொடு- இச்சரீரத்துடன்—ஏகிவாழ- போய்வாழும்படி— தண்டவில்வரம்- தடையில்லாதவரத்தை—நல்கென்ன- அருளென்று கேட்க— தந்தனமென்றலோமும் - ஈந்தனமெனவும்——(எ-று.) [இ-உ-க-ம்] வெளிப்படை. (௭௪)

(பழையலீலைவிருவுதல்.)

பகன்றநாமகளைநோக்கிப்புராதனலீலைசொல்வா... ... ... ... *
ணிகழ்ந்தவென்னுடலோடன்றிநின்றவேற்றுடலைமேவி ... ...*
யுகந்தலோகாந்தரத்துமுயர்கிரிநகரினூடு ... ... ... ... *
மகன்றவாறென்கொலென்னவாரணத்தன்னைசொல்வாள்......*

(இ-ள்.) பகன்றநாமகளைநோக்கி- (இப்படி) சொன்னசரஸ்வதியைப்பார்த்து— புராதனலீலைசொல்வாள் - பழையலீலைசொல்லுவாள்—நிகழ்ந்த-விளங்கிய—என்னுடலோடன்றி - என (தாதுபௌதிக) சரீரத்துடன்செல்லாமல்— நின்ற-இருந்த—வேற்றுடலைமேவி- வேறான (வாதிவாகிக) சரீரத்தைப்பொருந்தி— உகந்தலோகாந்தரத்தும்-உயர்ந்தமறுலோகத்திலும்—உயர்கிரிநகரினூடும்-மேலாயகிரிக்கிராமத்திலும்—அகன்றவாறென்கொலென்ன -(நா) னீக்கினவிதமென்ன வென்று கேட்க — ஆரணத்தன்னை சொல்வாள்- வேதமாதாசொல்லுவாள்.-(எ-று.) [இ-ம்] எனக்குச்செல்லக்கூடாதென்னுந் தூலசரீரமிவனுக் கெப்படி செல்லுமென்பதாம். (௭௫)

(தேவிபுத்தரம்-வேறு.)

ஒருவருக்குநாமொன்றுநல்கலமுணர்வின்வண்ணமே யுயிர்களெ
?ங்குமாற், கருதிமுற்றிநீகதிவிரும்பினாய்காதலித்தசிற்கண்ணளித்

போலிருக்குமளவில் — உந்துபாகனும் - செலுத்துகின்றசாரதியும் — தேரும் - இரதமும் — விசும்பும் - ஆகாசம் — அற்று - அறுபட்டு -- உயர்விரோதன் - மேன்மையானவிரோதவாசன் --- ஒருவனாயினான் - தனியனானான்.-(எ-று.) (௭௯)

(புதியவிலைப்பருடன் செல்லுமிடத்திற் செல்லுதல்.)

பிறைநெடுஞ்சரங்கவசம்வீழ்வுறப்பிளந்துமெய்யெலாம்பிளந்து
சிந்தலும், பொறையழிந்துவீழ்ந்தவனைநோக்கி வெண்புண்டரீ
கையப்புதியவிலைபார்த்து, இறைவனுவிபோமெல்லையாயினனவனை
நண்ணநானேகநல்கென்று, வறைதலோடுமவ்வினைநல்கினாளவனு
மின்னணிநொய்தாகிப்போகினான் ... ... ... ... ... ... ... ... ... *

(இ-ள்.) பிறைநெடுஞ்சரம் - அர்த்தசந்திரபாணத்தினால் — கவசம்வீழ்வுற - (வச்சிர) கவசஞ்சிதறிவிழும்படி --- பிளந்து - பிளந்து — மெய்யெலாம் - தேகத்தில் (அவயவங்கள்) யாவும் — பிளந்துசிந்தலும் - பிளக்கப்பட்டு (ச்சின்னபின்னமாய்ச்) சிதறுமளவில் — பொறையழிந்து - வலிமைநீங்கி -- வீழ்ந்தவனை - (பூமியிற்) சாய்ந்தவிரோதனை — நோக்கி - பார்த்து --- வெண்புண்டரீகையை - வெண்டாமரையாளை -- புதியவிலைபார்த்து - நூதனவிலைபார்த்து --- இறைவனுவிபோமெல்லையாயினன் - என்னுடையவுயிர்பிரியுஞ்சமயத்தையடைந்தான் — இவனைநண்ண - இவனைப்பொருந்த — நானேகநல்கென்று - நான்செல்லவருளென்று — அறைதலோடும் - சொன்னமாத்திரத்தில் — அவ்வினைநல்கினாள் - அத்தாயாகிய (சரஸ்வதி) யநுக்கிரகித்தாள் — அவனும் - அந்தவிலையும் — விண்ணில் - ஆகாயத்தில் — நொய்தாகி - லேசாகி -- ஏகினான் - போனான்.-(எ-று.) (ப-ம்) ஈசுவரானுக்கிரகத்தினாற் றூலசரீர மனுத்துவமானதென்பார், நொய்தாகியென்றார். (௮௰)

(இதுவமது.)

கருமுகிற்றலங்கடந்துவாயுவின் கதிகடந்துவெங்கதிரினெல்லைவி
ட்டருகுதாரகர்பதமகன்றுமேலவனையாதியாமமரர்நாடொரீஇ
மருவுயிர்த்தவண்டப்பிளந்துபோய் வாரியாதியாய்வளைந்தயாவை
யு, முருவியெல்லையுமுடிவுமற்றதாமுண்மைஞானவின்னெல்லை
யெய்தினான் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

(இ-ள்.) கருமுகிற்றலங்கடந்து - மேகமண்டலத்தைக்கடந்து -- வாயுவின்கதிகடந்து - வாதமண்டலத்தைக்கடந்து — வெங்கதிரினெல்லைவிட்டு - வெம்மையானசூரியமண்டலத்தைக்கட ந்து — அருகுதாரகர்பதமகன்று - ...

த்த தக்கடந்து—மேலவனாகிய - மேற்சத்தியலோகமுதலி ய—ஏமரர்நாடொரீஇ- தேவலோகங்களைக்கடந்து—மருவுய- பொருந்தாநின்ற — இருக்கவண்டம்பிளந்துபோய் - இவ்வண்டத் தைக்கிழித்துக்கொண்டுபோய்—வாரியாதியாய்வளர்ந்தயாவை ம்-சலமுதலானவெழாவரணத்தையும்—உருவி-ஊடுருவி—எல்லை யடம்-அளவும்-முடிவும்-அந்தமும்—அற்றதாம்-இல்லாததான— உண்மைஞானவின்ப-தத்துவசிதாகாயத்தை — ஒல்லையெய்தினள்- சீக்கிரத்திலடைந்தாள்.-(எ-று.) ஆவரணமேழாவன-புனல்-அக்கி னி-வாயு-ஆகாயம்- அகங்காரதத்துவம் மகதத்துவம்- பிரகிரு தியெனக்கொள்க. [இ-ங-க-ம்] வெளிப்படை. (அக)

( இதுவுமது. )

கற்பகோடிவெங்கருடனேழினுங்கடக்கொணுவத்திக் காடுகாய்த் தபோ, லுற்பவங்களாமண்டகோடியொன்றொன்றுறநோக்கரு துளவற்றினுள், ளற்பமின்றியாவரணபேதமேயயல்வளைப்புறும ண்டமொன்றனுட், டற்பதங்கடந்தெய்தியம்புயச்சவங்கிடந்தம ண்டபமடைந்தனள் ... ... ... ... ... ... ... ... ... ... ... ※

(இ-ள்.) கற்பகோடி- அளவில்லாதகாலம்— வெங்கருடனேழி னும்-வேகமாகக்கலுழன்பறந்தாலும்—கடக்கொணு - கடக்கக் கூடாததாயும்—அத்திக்காடுகாய்த்தபோல்- அத்திவனங்காய்த்தி ருக்கின்றனபோல—உற்பவங்களாமண்டகோடி - உதித்தனவாகி யவாவற்றபிரமாண்டங்கள்—ஒன்றொன்றுறநோக்கருதுள-ஒன் றையொன்றுபார்க்கக்கூடாததாயிருக்கின்ற—அவற்றினுள்-அ வ்வண்டங்களுக்குள்--அற்பமின்றி-பெரிதாக-ஆவரணபேதம்-ஆ வரணபேதமானது-அயல்வளைப்புறும்- அருகில்வளைந்துகொண் டிருக்கின்ற—அண்டமொன்றினுள் - ஓரண்டத்தினுள்—தற்பத ங்கடந்தெய்தி- ஞானாகாயத்தைக் கடந்துபோய்— அம்புயன்-ப துமவாசனது—சவங்கிடந்த - பிரேதமிருந்த—மண்டபமடைந் தனள்- அந்தப்புரத்தைச் சேர்ந்தாள்.-(எ,று.) [இ,ம்] தேவியானவள் சீக்கிரத்திற் புதியலீலை பதுமனிடஞ்சேர்ந்ததாம். (அஉ)

(விடூரதன்முற்பவமடையச்செல்லுதல்.)

தமரவண்டுசூழ்மலரின்முடிமிச்சவசரீரமாந்தரணிபாலனே, யெ மதுநாயகன்கருணைவாணியாலென்கொன்முன்னுமிங்கெய்தினே மென்று, வமரவெண்ணிவெண்கவரிவீசியங்கன்பரோர்புறத்தவளிரு க்கவின், விமலஞானியாம்விறல்விடூரதன்மேவுசீவன்விண்மீது போயதே. ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ※

லகில்விளையாடுவீரா, புதனாகிநிராசைதனையுள்ளேதேக்கிப்புறத் தேயாசையிற்றொழில்கள்பூண்டான்போலா, யதனுளுட்சீதளமா ய்ப்புறம்வெய்தாகியனவரதமுலகில்விளையாடுவீரா ... ... ... *

(இ-ள்.) இதமானவுதாரியாய் - உரிமையுள்ளவுதாரத்தையுடை யவனாய் — கடினாசாரமின்றி- கடினமானவாசாரமில்லாமல் — ஆ சாரங்கட்கு- ஆசாரங்களுக்கு — எளிதுபின்போய்- எளிதாகப்பி ன்சென்று — விதமானவனைத்துக்கும்-பலவிதமாகியசகல(வஸ்து க்களு)க்கும் — சார்பைநோக்கி- ஆதாரத்தைப்பார்த்து — வேண் டியவாறு- வேண்டியப்ரகாரம் — வீரா- ஸ்ரீராமா — உலகில்விளை யாடு-சகத்தின்கண்விளையாடுவாய் — புதனாகி- அறிவுடையவ னாய் — நிராசைதனையுள்ளேதேக்கி - நிராசையையுள்ளேநிறுத் தி — புறத்து- வெளியில் — ஆசையிற்றொழில்கள்பூண்டான்போ லாய் - காமக்கிரியைகளைத்தரித்தவன்போல — அதனுளுட்சீதள மாய்-அதனுள்ளேகுளிர்ந்தவனாய் — புறம்வெய்தாகி- வெளியி ல்வெப்பமுள்ளவனாய் — அனவரதம்-சதாகாலமும் — வீரா- ஸ்ரீரா மா — உலகில்விளையாடு - சகத்தின்கண்விளையாடுவாய் — (எ-று.) [இ-எ-கூ-ம்] வாசனாக்ஷயஞ்செய்து பூரணாநந்தவேத்தியமாய் வி ளங்கியஸ்வரூபானுபவத்தினாலுலகத்தில்விச்சையானபடி சஞ்சரிக் கலாம். (௯௪)

(திருக்குதிருஷ்டியிற்சகலமும்பிரியவஸ்துவாமெனல்.)

இவன்சுற்றனிவன்பகைவனிவனென்னுமிவ்வெறும்பொய்யிரா மநீயினையுமெண்ணேல், அவம்பற்றுநோய்மனத்தவர்க்கிவ்வாறு மறிந்தோர்க்குச்சகமுழுதுமகலாச்சுற்ற, நிவந்துற்றபலகோடி பவமோகத்தானீபகைநீயுறவென்பார்நிமிடந்தோறு, முவந்துற்ற மயக்கினுவாய்ப்பரமார்த்தத்தாலுலகெல்லாம்பகையாகுமுறவுமா கும் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

(இ-ள்.) இவன்சுற்றன்- இவனுறவன் — இவன்பகைவன்- இவன் பகைஞன் — இவனென்னும்-இவனென்கின்ற — இவ்வெறு ம்பொய்- இந்தமிகுந்தபொய்யை — இராமநீயினையுமெண்ணே ல்-இராமா நீசற்றுநினையாதே — அவம்பற்றுநோய்மனத்தவர்க் கு-பயனின்மையைப்பிடித்தவற்பமனத்தையுடையவர்களுக்கு — இவ் வாறும்-இந்தப்ரகாரமாம் — அறிந்தோர்க்கு-அறிஞருக்கு — சக முழுதுமகலாச்சுற்றம்- உலகமுழுது நீங்காதவுறவாகும் — நிவந் துற்றபலகோடி- ஒக்கியளவில்லாத — பவமோகத்தால்- சநநமய க்கத்தினால் — நீபகை- நீபகைவனென்றும் — நீயுறவென்பர்- நீயு

யின்றித்தோளாவெந்திரம்போலத்துவண்டுநின்றான், பொங்குக
வத்தீர்க்கதவனென்னுந்தந்தைபோகத்தினிச்சையெலாம்புந்திதீ
ர்ந்தான். ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

(இ-ள்.) அங்கவன்பின்னவனான - அவன்றம்பியாகிய — பாவ
னென்போன் - பாவனென்னும்பெயரையுடையவன் — மதிவுடை
மை - ஞானமடைந்தது — பாக்கியவானாதலால் - அனைவரிசையான
படியினால் — செங்கதிரோனுதிப்பதன்முன் - சிவந்தகிரணங்களை
யுடைய சூரியனுதிப்பதற்குமுன்னம் — அருணன்றோன்ற - அரு
ணோதயமாக — செங்கமலம் - செந்தாமரைப்பூ — கிண்கிணிவாய்
செய்வதொத்து - சதங்கையின்வாய்க்கொப்பாய் — தூக்கவறியா
மையும் - அதிகவறியாமையும் — மெய்வீடின்றி - உண்மைஞான
முமில்லாமல் — தோளாவெந்திரம்போல - ஊசலைப்போல — துவ
ண்டுநின்றான் - துவள்வுற்றுநின்றான் — பொங்குகவம் - மிகுந்ததவ
முடைய — தீர்க்கதவனென்னுந்தந்தை - தீர்க்கதவனென்கின்றபி
தாவானவர் — போகத்திலிச்சையெலாம் - விடயபோகத்திலாசைக
ளனைத்திலும் — புந்திதீர்ந்தான் - பற்றுவிடுத்தான் — (எ-று.)

(விதேகமுத்தியடைதல்.)

காலமேகாரணமாய்க்குடும்பவாழ்விற்காதலொழித்தறஞ்செறிந்த
காயந்தன்னைச், சாலமிகுதொழிற்பறவைக்கிடமாக்கிட்டுச்சா
னவியின்கரைவரையிற்றானேதீர்ந்தான், கோலியொருசுமைசுமப்
பான்குறித்தவெல்லைகொண்டுபோய்ப்போடுவதுபோற்குரம்பை
யிட்டுமாறுபற்றென்றின்றிப்பூவிருப்புறம்வானுறல்போற்
பரமபதவாழ்வுபெற்றான். ... ... ... ... ... ... ... ... ... ... *

(இ-ள்.) காலமேகாரணமாய் - காலங்காரணமாக — குடும்பவா
ழ்வில் - சமுசாரவாழ்க்கையில் — காதலொழித்து - ஆசையைவிட்
டு — சாலமிகுதொழிற்பறவைக்கு - மிகுந்ததொழிலையுடையனேகங்க
ரப்பக்ஷிகளுக்கு — இடமாக்கிட்டு - இடமாகுங்கடியாக —
அறஞ்செறிந்தகாயந்தன்னை - மிகவுநெருங்கின சரீரத்தை — சான
வியின்கரைவரையில் - கங்காதீரத்திருக்கின்றமலையினிடத்தில் —
தானேதீர்ந்தான் - தானேவிட்டுவிட்டான் — கோலியொருசுமைசு
மப்பான் - சங்கற்பித்தொருசுமையைச்சுமப்பவன் — குறித்தவெ
ல்லை - குறித்தவிடத்தில் — கொண்டுபோய்ப்போடுவதுபோல் - கொ
ண்டுபோய்ப்போடுவதுபோல — குரம்பையிட்டு - சரீரத்தை
விட்டு — மாறுபற்றென்றின்றி - ஆசைபொருந்தின பற்றுக்க
ளொன்றுமில்லாமல் — பூவிருப்புறம்வானுறல்போல் - புட்பவாச
னையாகாயத்திற்பொருந்துவதுபோல — பரமபதவாழ்வுபெற்றா
ன் - பிரமானந்தத்தையடைந்தான் — (எ-று.) (௬௮)

(௱௰௭)

(புண்ணியபாவனனுபவங்கூறல்.)

தொழிலின்றிக்காட்சியெனுந் துன்பமின்றித்தொலைவிலதோன்
றிடமாஞ்சொரூபம்பெற்ற,வழியின்முனியிறத்தலுமேயவன்றன்
பன்னியம்புயநின்றகலளிபோலங்கம் விட்டாள், விழிகளிகர்தா
ய்தந்தையிறப்பக்கண்டுமேற்செயவேண்டியகிரியை விதியிற்செ
ய்வான், வழிபடுபுண்ணியன்முயன்றான் பாவன்றனும்வருத்தமெ
னுங்கடற்புகுந்துமயங்கலுற்றான்... ... ......... ... .... ... .. *

(இ-ள்.) தொழிலின்றி - தொழிலில்லாததாகியும் — காட்சியெ
னுந்துன்பமின்றி - சகமென்னுந் துன்பமில்லாததாகியும் — தொ
லைவிலதோன்றிடமாய் - பழமையான ஞாநோதயமாதற்கிடமாகி
யிருக்கின்ற — சொரூபம்பெற்ற - (தனதாத்ம) ஸ்வரூபத்தைப்
பெற்ற — அழிவின் முனியிறத்தலும் - கெடாத (சூக்ஷ்மவடிவமான)
முனி (யுடல்) மரிக்கவும் — அவன்றன்பன்னி - அவனதுபாரியா
யவள் — அம்புயநின்றகலளிபோல் - தாமரைப்பூவிலிருந்து நீங்கு
கின்றவண்டைப்போல — அங்கம்விட்டாள் - சரீரத்தைநீங்கினாள்
— விழிகளிகர் - கண்களையொத்த — தாய்தந்தையிறப்பக்கண்டு -
மாதாபிதாக்கண்மரிக்கப்பார்த்து — மேற்செயவேண்டியகிரியை
- இனிச்செய்யவேண்டியகருமங்களை — விதியிற்செய்வான் விதிப்
படிசெய்யும்பொருட்டு — வழிபடுபுண்ணியன் முயன்றான் - வழிப
டுகின்றபுண்ணியனெத்தனஞ்செய்தான் — பாவன்றனும் - பாவன
னும் — வருத்தமெனுங்கடற்புகுந்து - துக்கமென்னுஞ்சமுத்திர
த்திலழுந்தி — மயங்கலுற்றான் - மயக்கமடைந்தான் — (எ-று.)

(இதுவமது.)

அன்னையன்னையென்னுமென்னையீன்றவை யாவையாவென்னுமந்
தோவந்தோ,வென்னையென்னையென்னுமாற்றாதேயெரிமிதி
த்தாற்போற்கானமெங்குமோடுந், தன்னையின்முன்னவனைநோ
க்கித்தேறுன்றயப்பிமிகத்தளர்வுற்றான்றளராமுன்னோன், பின்னொ
ருபுடற்கிறத்தலியல்பேயென்றுவேறொன்று நினையாமல்விதியே
செய்தான்........ ... ... ... ... ... ... ... ... ....... ... *

(இ-ள்) தம்பி - பாவனனவன் — என்னையீன்ற - என்னைப்பெற்ற
— அன்னையன்னையென்னும் - தாயேதாயேயென்பன் — ஐயா
வையாவென்னும் - பிதாவே பிதாவே யென்பான் — அந்தோவந்
தோ - ஐயோவையோவென்பான் — என்னையென்னையென்னு
ம் - இதென்ன விதென்னவென்பவன் — ஆற்றாதே - (துன்பத்தைச்)
சகிக்கமாட்டாதவனாய் — எரிமிதித்தாற்போல் - நெருப்பை

மிதித்தவனைப்போல — கானமெங்குமோடும் - வனங்களெல்லா மோடுவான் -- தன்னெதிரில் - தனக்கெதிரினிக்கின்ற -- முன்னவனை நோக்கித்தேறான் - தமையனைப்பார்த்துத் தெளியான் — மிகத்தளர்வுற்றான் - மிகவுந்தளர்வையடைந்தான் — தளராமுன்னோன் - தளர்ச்சியில்லாத தமையனானவன் — பின்னோருடற்கு - பின்னவனையொத்தசரீரத்துக்கு — இறத்தலியல்பேயெனா - மரிப்பது சுபாவமேயென்று -- வேறொன்று நினையாமல் - மற்றொன்றை நடுஞ்சிந்தியாமல் — விதியேசெய்தான் - (கருமத்தை) விதிப்படி செய்தான் — (எ-று.) (சய)

(ஞானோபதேசங்கூறல்.)

மறைநெறிகண்முடித்ததற்பின்சோகத்தாலே வாய்மூடாவிளவ
லனைவந்துசார்ந்து, நிறையறிவாம்புண்ணியன்பாவனனைநோக்கி
நெஞ்சழிக்குந்துயரமைந்தா நீத்தலென்னப், பொறைமிகுநின்பி
தாநின்னைதன்னையோடும் பொருந்தியிருந்துளபதத்தின் பொலி
வைக்கேளாய், குறைவுநிறைவிலதென்றுந்தனதாய்த்தானாய்ச்சோ
திலதாம்வீடெனும்பேர்கூறவற்றாம் ......................

(இ-ள்.) மறைநெறிகண்முடித்ததற்பின் - வேதமார்க்கத்தின்படி (கருமம்) நிறைவேற்றினபின்பு — சோகத்தால் - துன்பத்தினால் — வாய்மூடாவிளவலனை - வாய்மூடாமலழுகின்ற தம்பியை — வந்துசார்ந்து - வந்தடைந்து — நிறையறிவாம்புண்ணியன் - பூரணஞானத்தையுடைய புண்ணியனானவன் — பாவனனைநோக்கி - பாவனனைப்பார்த்து — நெஞ்சழிக்குந்துயரம் - மனதைவருத்துகின்ற துன்பத்தை — மைந்தா - குழந்தாய் — நீநீத்தலென்ன - நீயேனொழிக்கவில்லை — பொறைமிகுநின்பிதா - பொறுமைமிகுந்த உனதுதந்தையானவர் — நின்னைதன்னையோடும் - உனதுமாதாவோடும் — பொருந்தியிருந்துள - அமைந்திருக்கின்ற — பதத்தின்பொலிவைக்கேளாய் - இடத்தின்சிறப்பைக்கேட்பாய் — குறைவுநிறைவிலது - அற்பமுமகத்துமென்பதின்று — என்றும் - எப்போதும் — தனதாய் - தனதிடமாய் — தானாய் - தன்மயமாய் — சோதிலதாம் - குற்றமில்லாததான — வீடெனும்பேர்கூறவற்றாம் - மோக்ஷமென்னுநாமத்தினாற்சொல்லத்தக்கதாம் — (எ-று.) (ப-ம்) - அற்பத்துவமகத்துவமில்லையென்பார், குறைவுநிறைவிலதென்றும், தானேதானாய் விளங்குகின்றது வீடென்பார், தனதாய்த்தானாயென்றுங்கூறினார்.

{வீட்டினதிலக்கணங்கூறியபின்னுறுதிப்பொருளிதென்று
சதநபாப்பனையையறிவிக்கத்தொடங்குதல்.}

அனைவருக்குமேவுமிடமதுவேயாகுமறிஞருக்குமெய்யுருவமது

க்கதிறனும் — ஏர்களையுண்டாமோ - ஒருவரம்புண்டாயிருக்குமோ — சொரூபமிலா - உருவமில்லாத — அஞ்ஞானக்கானன்மேட்டில் - அறியாமையென்னுங்காட்டிடலில் — தொடர்ந்தவாசனைக்கோடை - தொடர்ந்துவாராநின்றவாசனையென்னும்வெயிற்காலத்தில் — சுழல்வெங்கானற்பெருநீர் - சுழலுகின்றவெவ்வியகானற்பிரவாகசலமானது — சுகாசுகயார்திரைகண்மோதி - சுகதுக்கமென்னுமலைகளையடித்துக்கொண்டு — பேதமொருகளாயின்றிப்பிறழும் - வேற்றுமையோர் வரம்பில்லாமற்பிரளும் — (எ-று.)

(பாவனையேசுகதுக்கமாமெனல்.)

இல்லுறவுபகைநேயங்கோபமாசை யிழிவுயர்வாதிகள்வடிவாயெழுந்தஞாலம், புல்லுறுநின்றுமமாத்திரத்திலேபொலிந்துவிரிகின்றதலாற்புறனிலுண்டோ, நல்லுறவாநினைத்திடினல்லுறவேயாவர்நண்ணாராய்ப்பாவிக்கினண்ணாராவர், சொல்லுறநஞ்சமுதாமிரண்டின்குணங்கள்போலுங்குறித்திடுபாவனைக்கட்டுக் கொலைந்தாலுண்டோ.... ... ... ... .. ... ... ... ... .... ... .... ... *

(இ-ள்.) இல்லுறவு - மனைவிமுதலியபந்துவும் — பகைநேயம் - திவேடமுஞ்சிநேகமும் — கோபமாசை - வெகுட்டவிருப்பும் — இழிவுயர்வாதிகள் - தாழ்வுமேன்மைமுதலியவைகளையே — வடிவாயெழுந்தஞாலம் - உருவமாயுண்டானசகமானது — புல்லுறுநின்றுமமாத்திரத்தினால் பொருந்தியதனுபெயர்மாத்திரத்தினால் — பொலிந்துவிரிகின்றதலால் - மிகுந்துபரவுகிறதேயல்லாமல் — புறனிலுண்டோ - வேறொன்றிலுண்டாமோ — நல்லுறவாநினைத்திடில - நல்லபந்துவாகநினைத்தால் — நல்லுறவேயாவர் - நல்லுறவேயாவார்கள் — நண்ணாராய்ப்பாவிக்கில் - பகைவராகநினைத்தால் — நண்ணாராவர் - பகைவராவார்கள் — சொல்லுறநஞ்சு - சொல்லுகின்றவிடமும் — அமுது - (பிழைப்பிக்கின்ற) வமுதமுமாகிய — இரண்டின்குணங்கள்போலும் - இரண்டின்குணங்களைப்போலவும் — குறித்திடுபாவனைக்கட்டு - குறித்திடுகின்றபாவனையுபந்தமானது — கொலைந்தாலுண்டோ - கெட்டாலுண்டாகுமோ - (எ-று.)

(பேதபாவத்தையபேதஞானத்தைக்கூறல்.)

ஒன்றிலேதோன்றியனைத்துருவமானவுணர்வுக்குப்பகையறிவென்றுளாட்டமெங்ஙன், இன்றியொழிநசைபுண்ணீர்தோல்சண்டேயிந்தவெலும்புப்பஞ்சரந்தன்னிலியானென்று, நின்றிவணிநின்பணத்தானினைந்துநோக்காய்நிமலமாம்பரவெளிநேறிடாநோக்கிற், பொன்றுறுமயர்நீயில்லைநானுமில்லைப்புண்ணியபாவமெனவேபோய்ப்போதந்தோன்றும்.... .. ... ... .... ... ...... ... *

(இ-ள்.) ஒன்றிலேதோன்றி ஒன்றான (வாத்மாவி) லுண்டாய்— அனைத்துருவமான-சகலவடிவங்களுமாகிய—உணர்வுக்கு- அறிவுக்கு—பகையுறவென்று- பகையென்று முறவென்றும் —உரைப்பதெங்ஙன்-சொல்லுவதெப்படி—இன்றியொழி - இல்லாமற்கெடுக்கின்ற—தசை-ஊன்களினாலும்—புன்னீர் - உதிரங்களினாலும்—தோல்கள்- சருமங்களினாலும்—மேய்ந்த -கட்டியிருக்கின்ற—எலுப்புப்பஞ்சரந்தன்னில - அஸ்திக்கூடான (சரீர) த்திலிருக்கின்ற—இயாமாரென்று- நாமாரென்று (விசாரிககன்) —நின்றவனீ-இருந்தவனீயே— நின்மனத்தால் - உன்மனதினால் — நினைத்துநோக்காய்-சிந்தித்துப்பார்ப்பாய்—நிமலமாம்பரமவிழி மாசற்றபிரமதிருஷ்டியினது—நெறியாலுக்கில்-கிரமமாகப்பார்த்தால்—பொன்றுதுயர் நீயுமிலலை - நசிக்கின்றதுன்பமுள்ள நீயென்பதுமில்லை — நானுமில்லை நானென்பதுமில்லை —புண்ணியபாவனெனல்போய்- புண்ணியனென்றும் பாவனென்றுஞ்சொல்லப்பட்ட நாமமும்போய்—போதந்தோன்றும் - ஞானந்தோற்றும்—(எ-று.) (௪௫)

{ சநநமித்தையாமென்றறிவிக்குநிமித்த மச்சநநாந்தரங்களைக்கூறல். }

ஏகியதீவுகடோறும்பிறந்தசென்ம மெண்ணவொண்ணாவின்னாவ
ற்பெருந்தீவத்திற், கோகிலமாய்முன்பிறந்தாய்விலங்குமேகங்கு
ன்றுமரமூர்வனபட்குலங்கடம்மிற்,போகியசென்மத்தொகுதிப
கல்வொண்ணாப்பொருந்துமவற்றுன்கிளையாய்ப் போனார்க்கெல்
லா, மாகுலமுற்றிலையென்னீயவற்றின்மட்டோவனந்தசேசப்பிற
வியதைபுக்கேளாய்... ... ... ... ... ... ... ... ... ... ... *

(இ-ள்.) ஏகியதீவுகடோறும்- போனதீவுகடோறும்—பிறந்தசென்மம்-(நீ)செனித்தசென்மமானது— எண்ணவொண்ணா-எண்ணமுடியாது— இன்னாவற்பெருந்தீவத்தில்- இந்நாவலென்னுந்தீவில் — முன்கோகிலமாய்ப்பிறந்தாய்-முன்னங்குயிலாகப்பிறந்தாய் —விலங்கு- (பின்பு) மிருகங்களும்—மேகம-மேகங்களும்—குன்று- மலைகளும் —மரம்-விருக்ஷங்களும்— ஊர்வன-ஊர்வனங்களும்— புட்குலங்கள்- பறவையினங்களுமாகிய—தம்மில்-இவைகளிடத்தில்—போகியசென்மத்தொகுதி- கழிந்தபிறப்பின்திரளானது— பகல்வொண்ணா - சொல்லமுடியாது—பொருந்துமவற்று- பொருந்தாநின்றவைகளில்—உன்கிளையாய்ப்போனார்க்கெல்லாம் - உனதுறவினர்களாயிறந்துபோனவர்களுக்கெல்லாம்—நீயாகுலமுற்றிலையென் - நீவிசனப்படாததென்

ண—அவற்றின்மட்டோ- அதுமட்டுந்தானோ— அனந்ததேசப்
பிறவி- இன்னமளவற்றதேசங்களிற்செனித்தபவங்களை— அறை
யக்கேளாய்- சொல்லக்கேட்பாய்—(எ-று.) (௪௬)

( இதுவுமது. )

கோசலத்துந்தெசார்ணைவத்தும்பௌண்டரத்துங்குச்சரத்துந்து
மூரத்துங்கோகனத்தும்போசலத்துமேகயத்துஞ்சாருவத்து
ம்பூபதியாய்வானரமாய்புழுவாய்ப்புல்வாய், மாசலத்திற்கரண்ட
மாய்ப்பதங்கமாகிமாசுணமாய்வேசரியாய்மட்டில்சென்ம, நீச்சக
லவாதனையாற்பிறந்தபோதினின்கிளைஞர்க்கிரங்காதநீதியென்னே

(இ-ள்.) கோசலத்தும்- கோசலதேசத்திலும்— தெசார்ணவத்
து-தெசார்ணவதேசத்திலும்— பௌண்டரத்தும்- பௌண்டர
தேசத்திலும்—குச்சரத்தும்- குச்சரதேசத்திலும்— துமூரத்து
ம்- துமூரதேசத்திலும்—கோகனத்தும்- கோகனதேயத்திலு
ம்—போசலத்தும்-போசலதேசத்திலும்— ஏகயத்தும்-ஏகய
தேயத்திலும்— சாருவத்தும்- சாருவதேயத்திலும்— பூபதியா
ய்-அரசனாகவும்—வானரமாய்- குரங்காகவும்— புழுவாய்- கிரு
மியாகவும் —புல்வாய்- கலைமானாகவும்—மாசலத்திற்கரண்டமா
ய்-பெருநீரினீர்காக்கையாகவும்—பதங்கமாகி- பக்ஷியாகவும்—
மாசுணமாய்-சர்ப்பமாகவும்—வேசரியாய்- கழுதையாகவும்—ம
ட்டில்சென்மம்-அளவற்றபிறவிகளை— நீச்சகலவாதனையால்- நீச
மஸ்தவாசனைகளினால்—பிறந்தபோதில்- செனித்தபோது (உண்
டாகிய)— நின்கிளைஞர்க்கு- உனதுறவினர்க்கு— இரங்காதநீதி
யென்னே-விசனப்படாதஞாயமென்ன—(எ-று.) (௪௭)

(இச்சநநமரணமற்றவாத்மாவைத்தெரிசிக்கவேண்டுமெனல்.)

அளவிறந்தபிறவிதொறும் பிறந்தோர்க்கெல்லா மன்னைதாதை
யையெண்ணிலகன்றகானிற், கிளர்மரங்கடருஞ்சருகையெண்ண
வற்றுங்கேதமுறக்கணக்கில்லைக்கேளாய்மைந்தா, தளர்வின்றிப்
பாவபாவனைகளின்றிச்சாமரணமற்றவுனைச்சங்கியாதே,புளமு
றநோக்காய்துயர்விட்டஞ்ஞானத்தையொழித்துணையிலுள்ளபடி
யுன்னைக்காண்டி.................................... *

(இ-ள்.) அளவிறந்தபிறவிதொறும்- அளவற்றசநநங்டோறு
ம்—பிறந்தோர்க்கெல்லாம்- செனித்தவர்க்கெல்லாம் — அன்னை
தாதையையெண்ணில்- மாதாபிதாக்களை யெண்ணுமிடத்தில்—
அகன்றகானில்-விசாலமானவனத்தில்—கிளர்மரங்கடருஞ்சருகை
-விளங்குகிறவிருக்ஷங்கள்கொடுக்கின்றசருகை—எண்ணவற்றும்-எ

ர்கள் — மாண்டுபோமுயிர்கட்கெல்லாம் - மரணமடைகின்ற ஜீவர்களனைவர்க்கும் — பரவிந்தமரப்போலாம்- நுனங்களிப முடைநமையைப்போலவாரும் — (எ-று.) [இ-உ-க-ய்] இவ்விருவருஞ் ஜீவன்முத்தராயிருந்து விதேகமுத்திநிலையையடைந்தனரென்பதாம். (உ)

{ சர்வமுந்தனதுபிரியவடிவமாமென்றறிவித் தன்னனுபவமுதிப்பதற்கிச்சாத்தியாகம்வேண்டுமெனல் }

அனந்தமாம்பிறப்பற்றோருக்ககிலமுமயலன்றாகிற் ... ... ... ※
சினத்திடையத்தவேண்டாவாசலாற்செறிந்தவாசை ... ... ※
கனத்தினைவிடுவதல்லாற்கதித்தூறவளர்க்கலாகா ... ... ※
மனந்தனில்வளர்க்கிற்சிந்தைவன்னிக்குவிறகாமன்றே ... ... ※

(இ-ள்.) அனந்தமாம்பிறப்பற்றோருக்கு-அளவற்றசநநமடைந்தவர்களுக்கு — அகிலமுமயலன்றாகில்- சமஸ்தமும்பந்துவாயிருக்குமானால் — சினத்திடையத்தவேண்டா-பகைத்தலும்வெறுப்புதலும்வேண்டுவதென்ன — ஆசலால் - ஆசையினால் — செறிந்தவாசை-மிகுந்தவாசையின் — கனத்தினைவிடுவதல்லால்- பாரத்தைவிடுவதன்றி-கதித்தூறவளர்க்கலாகா- பெருகவளர்க்கக்கூடாது — மனந்தனில்வளர்க்கில்- மனதிலாசையைவளர்த்தால் — சிந்தைவன்னிக்கு- சிந்தனையென்னுமக்கினிக்கு — விறகாம்- (ஆசையானது) விறகாகும் — (எ-று.) (௩)

(ஆவிச்சாத்யாகத்திற்சுகமுதிக்குமெனல்.)

இச்சையாம்விறகுமாண்டாலெண்ணமாம்வன்னிமாளு ... ... ※
நிச்சயமாகுந்தேயத்தியாகமாநெடுந்தேரேறி ... ... ※
மெச்சியவுதாரக்கண்ணால்வேட்கையான்மிகவுவாடு ... ... ※
கொச்சைஞாலத்தைநோக்கிக்குறைவறவிருப்பாய்தீரா ... ... ※

(இ-ள்.) இச்சையாம்விறகுமாண்டால்-ஆசையென்னும்விறகு நசித்தால் — எண்ணமாம்வன்னிமாளும்- சிந்தையென்னுமக்கினி நசிக்கும் — நிச்சயமாகும்- (இது) உண்மையாகும் — தேயத்தியாகமாம் தேகத்தியாகமாகிய — நெடுந்தேரேறி- மகாரதத்திலேறி — மெச்சியவுதாரக்கண்ணால்- சகலருந்துதிக்கவுதாரமான (கருணா) திருஷ்டியினாலே — வேட்கையான்மிகவும்வாடும் - ஆசையினால் மிகவும் வாடாநின்ற — கொச்சைஞாலத்தைநோக்கி- அற்பமான சகத்தைப்பார்த்து — தீரா-தீரத்தையுடைய ஸ்ரீராமா — குறைவறவிருப்பாய் குறைவில்லாமலிருப்பாய் — (எ-று.) (௪)

பொருந்தியதாமரையிலிருக்கின்ற விலக்குமி—திருமுகம் - சிறப்புள்ளமுகமும்—நலம்பெறத்தோன்ற - நன்மையாகவுண்டாகா து—(எ-று.) (கூ)

(மனதிற்கிச்சாபந்தநீக்கமேல்முத்தியாமெனல்)

மதியைமேகம்போல்வெண்டலச்சுதையினைமைபோ ... ※
லதிகநன்னெஞ்சையாசையாம்பேயழகழிக்கும் ... ※
பொதியுமாலெலா நீக்கிவன்பவப்பயன்போக்கி ... ※
முதிர்மனத்தின்மாலிணிப்பறின் முத்திவேறுளதோ ... ※

(இ-ள்.) மதியைமேகம்போல் - சந்திரனை மேகமறைக்கின்றது போலும்—வெண்டலைச்சுதையினை- வெண்மையான விடத்திற்றீற்றியசுண்ணச்சாந்தைக் (கெடுக்கும்)— மைபோல் - மைபோலவும்—அதிகநன்னெஞ்சை-மிகவுநல்லமனதை—ஆசையாம்பேய்-இச்சாபசாசமானது—அழகழிக்கும்- தேயுசைகெடுக்கும்—பொதியுமாலெலாநீக்கி- அடைந்தவசைகளனைத்தையுங்கெடுத்து—வன்பவப்பயன்போக்கி வலியசநநத்தினச்சத்தைக் கெடுத்து—முதிர்மனத்தின்-பக்குவமானமனத்தின்—மால்பிணிப்பறில்-ஆசைக்கட்டானதுநாசமானால்—முத்திவேறுளதோ மோக்ஷம்வேறுண்டோ—(எ-று.) [இ-கு-க-ம்] மனமானது சித்தமாய்ச் சகவிச்சையைநீக்குதலே மோக்ஷமாமென்றதாம். முன்கதையிற்கூறவேண்டிய விப்பத்து கவிதையை யிந்நூலாசிரியரிக்கதையிற்கூறினதென்னவெனிற். சமாதிக்குரிய யவஸ்சாத்தியாகஞ் சகசத்துக்குவரும்பொருட்டெனக்கொள்க. (ய)

{ இச்சையைச்சுருக்கிற்கெடுப்பதையறிவித்
திஃது பெருக்கிற்கெடுப்பதையுமறிவிக்கத்தொடங்கல். }

இன்னதன்றெனிலிராகவமாபலியென்ன ... ※
நன்னதாகியபுந்தியான் ஞானமேநேர்வா ... ※
யன்னதேநலமென்றுமனையதேநென்று ... ※
சொன்னமாமுனிதனையேயிராமனுஞ்சொன்னான் ... ※

(இ-ள்.) இன்னதன்றெனில் - இத்தன்மைகூடாவிடின்—இராகவ ஸ்ரீராமா —மாபலியென்ன- மாவலியைப்போல—நன்னதாகிய புந்தியால்- நன்மையானபுத்தியினால்— ஞானமேநேர்வாய்- ஞானத்தையேயடைவாய்—அன்னதேநலமென்றும்- அத்தன்மையேநன்மையென்று சொல்லவும்—அனையதேநென்று - அப்படிப்பட்டதென்று—சொன்னமாமுனிதனை - சொல்லிய

மகாமுனியைப்பார்த்து—இராமனுஞ்சொன்னான்- ஸ்ரீராமனுங் கேட்டார்—(எ-று.) (௰௧)

(மாவலியின்பெருமையுரைத்தல்.)

விநயமுள்ளவனுக்கருந்தவனுத்தரம்விளம்புந்- - - - - *
தனுத்தோள்களாலுலகெலாமஞ்சுறச்சயித்தோன் - - - *
பினாகிசார்ங்கியைமுதலினர்தாழ்வுறப்பெரியோ - - - *
னநாதியாமெனப்பாதலத்தரசுசெய்யவலன் - - - - *

(இ-ள்.) விநயமுள்ளவனுக்கு-இப்படிக்கேட்டவுசாரமுள்ள ஸ்ரீராமனுக்கு—அருந்தவன்- அரியதவத்தையுடையவசிட்டமுனி— உத்தரம்விளம்பும்- உத்தரஞ்சொல்லுவார்— தனுத்தோள்களால்- தனதுபுயங்களினால்— உலகெலாமஞ்சுறச்சயித்தோன் - சகங்களனைத்துநடுங்கும்படிசயஞ்செய்தவன் — பினாகி - ஈஸ்வரனும்— சார்ங்கியைமுதலினர்- விஷ்ணுமுதலியசகலரும் — தாழ்வுறப்பெரியோன்- தாழும்படிபெருமையுள்ளவன் — அநாதியாமெனப்பாதலத்தரசுசெய்யவலன் - அநாதியாமெனக் கூறப் பாதாளலோகத்தரசுசெய்யுஞ்சமானமற்ற (அசுர)ராசன்—(எ-று.) (௰௨)

(மாவலிசனித்திருத்தல்.)

மாவலிப்பெயரானுயர்விரோசனன்மைந்த - - - - *
னாவலிப்புறுகோடிபத்தாண்டரசானோன் - - - - - *
காவலித்திகழ்மேருவின்சிரமணிக்கதவு - - - - - - *
மேவலிற்பொலிசாளரமேனிலமேவி - - - - - - *

(இ-ள்.) மாவலிப்பெயரான் - மகாபலிச்சக்கரவர்த்தியென்னு நாமமுடையவன்—உயர்விரோசனன்மைந்தன்-மேன்மையான விரோசனனுடையபுத்திரன்—ஆ - ஆச்சரியம்—வலிப்புறு - வலிமையுள்ள—பத்துக்கோடியாண்டு-பத்துக்கோடிவருடம்— அரசானோன்-இராசாவானவன்—காவலித்திகழ் காவலிலேவிளங்குகின்ற—மேருவின்சிரம்- மகாமேருவினுடையமுடியிலிருக்கின்ற—மணிக்கதவம்-இரத்தினங்களாற்பதித்த—மேவலிற்பொலி மேவுதற்கரியபிரகாசம்பொருந்திய—சாளரம்-பல்கணிகளையுடைய—மேனிலமேவி-மேல்வீட்டையடைந்து—(எ-று.) [இ ச க-ப] புண்ணியபரிபாகத்தினாற்சித்தசுத்தியும்அச்சித்தசுத்தியாற் சாதனசதுஷ்டயமும் அச்சாதனசதுஷ்டயத்தான்முத்தியையடைவதற்குக் காரணவாத்மவிசாரமுமுதித்ததனாலந்தியவஸ்துவை நிதித்தியாசிக்கத் தொடங்கினதாம். (௰௩)

(அரசைவெறுத்தல்.)

ஒருபகற்றனியிருந்தனனிவையிவையுணர்ந்தான் - - - *
பெருகுபோகங்கண்முனிந்தனன்பிறவியைநினைந்தான் - *
பொருவின்மூவுலகங்களிற்போகங்கணெடுநாட் - - - *
பருகநல்குநம்பேரரசாலென்கொல்பயனே - - - - *

(இ-ள்.) ஒருபகற்றனியிருந்தனன் - ஒருநாடனியேயிருந்தவனாய் — இவையிவையுணர்ந்தான் - இவையிவைகளையெண்ணினான் — பெருகுபோகங்கள் - மிகுந்தபோகங்களை — முனிந்தனன் - வெறுத்து — பிறவியைநினைந்தான் - சம்சாரத்தைநினைத்தான் — பொருவின்மூவுலகங்களில - சமானமற்ற மூன்றுலகங்களிலுள்ள — போகங்கள் - செல்வங்களை — நெடுநாட்பருகநல்கும் - வெகுகாலமாயனுபவிக்கக்கொடுக்கின்ற — நம்பேரரசால் - நமதுமகாராசாங்கத்தினால — என்கொல்பயன் - என்னப்பிரயோசனம் — (எ-று.)

(போகத்தைவெறுத்தல்.)

எய்துபோதினிலினியவாயெங்ஙனேயெனினு - - - - *
நொய்தினீங்குமிப்போகத்தினின்பமேநுவலி - - - - *
னெய்தநோக்கியபின்பமுநெருநல்போலின்று - - - *
செய்தசெய்வதேயல்லதுகண்டிலஞ்செயல்கள் - - - - *

(இ-ள்.) எய்துபோதினில் - அடைந்தகாலத்தில் — இனியவாய் - இன்பமாய் — எங்ஙனேயெனினும் - எவ்விடத்திலாகிலும் — நொய்தினீங்கும் - அற்பநேரத்திலேநீங்குகின்ற — இப்போகத்தின் - இச்செல்வத்தினது — இன்பமேநுவலின் - இன்பத்தைச்சொல்லுமிடத்தில் — எய்தநோக்கியபின்பமும் - அடையப்பார்க்கின்றகாலமும் — நெருநற்போல் - நேற்றைப்போல — இன்றும் - இன்றைக்கும் — செய்தசெய்வதேயல்லது - செய்ததைச்செய்வதேயல்லாமல் — செயல்கள்கண்டிலம் - (வேறு)செயல்களைப்பார்த்திலம் — (எ-று.)

(போக்கியத்தை வெறுத்தல்.)

உண்டவின்பமேமீளவுமுண்கின்றதொருநாட் - - - - *
கண்டகாட்சியேமீளவுங்காண்கின்றதுவந்து - - - - *
கொண்டகோலமேமீளவுங்கொள்கின்றதென்றால் - - - *
விண்டமேலவர்தாமுந்தொழிவரோவெறுத்து - - - *

(இ-ள்.) உண்டவின்பமே - புசித்தசுகமே — மீளவுமுண்கின்றது - திரும்பவும்புசிக்கப்படுகின்றது — ஒருநாட்கண்டகாட்சியே -

றுநாட்காணப்பெற்றகாட்சியே—மீளவுங்காண்கின்றது - திரு
பவுங்காணப்படுகின்றது--உவந்துகொண்டகோலமே -மகிழ்ச்
பாகக்கொண்டவலங்காரமே— மீளவுங்கொள்கின்றது-திரும்ப
ந்தரிக்கப்படுகின்றது—என்றால - என்றுசொன்னால்— விண்ட
மவர்-சொல்லியமெய்ம்மையானசத்துக்கள் — வெறுத்து- வெ
ப்புற்று--நாணுறுதொழிலோ- வெட்கப்படாமற்போவார்க
ளா—(எ-று) (௰௬)

(காலத்தைவெறுத்தல்.)

அருந்துமட்டினியென்றதேமீண்டுமீண்டருந்தி - - - ❋
திருந்திடாமடன்சிறுவர்போற்செயலறியாது - - - - ❋
வருந்துகின்றனநாள்பக்கமாதமாண்டுகங்கள் - - - - ❋
பொருந்திவந்ததேயல்லதுபுதுதொன்றய்வாரா - - - ❋

(இ-ள்.) அருந்துமட்டு- புசிக்கின்றவளவும்—இனியென்றதே
இன்பமென்றுசொல்லுவதையே—மீண்டுமீண்டருந்தி - திரும்
பத்திரும்பப்புசித்து—திருந்திடாத- (அறிவு) திருத்தமில்லாத-
மடன்சிறுவர்போல் - அற்பமான குழந்தைகளைப்போல —செய
லறியாது- ஒழுக்கந்தெரியாமல்— வருந்துகின்றனம் - வருத்தப்
படுகின்றோம்—நாள்- தினமும்—பக்கம்- பக்ஷமும்—மாதம்-தி
ங்களும்—ஆண்டு- வருடமும்—உகங்கள்- யுகங்களும்— பொரு
ந்திவந்ததேயல்லது-முன்பொருந்திவந்ததேயன்றி—புதுதொன்
றய்வாரா-புதிதாகவேவொன்றம்வாராது—(எ-று.) (௰௭)

(நித்தியவஸ்துவை விசாரித்தல்.)

செய்யத்தக்கனயாவையுஞ்செய்துமிச்செயலா - - - ❋
லுய்யப்பெற்றதென்செயன்மறுத்திலாதொன்றுலகி - - ❋
லைப்பட்டறயாதிலுமெய்துமப்பொருடான் - - - - ❋
வெய்யபோகத்தாலொழிந்துமேல்வருநெறியாதே - - - ❋

(இ-ள்.) செய்யத்தக்கன- செய்யத்தக்கனவாகிய— யாவையுஞ்
செய்தும்- வினைதனையுஞ்செய்தும்— இச்செயலால்- இச்செய்
கயினால்— உய்யப்பெற்றதென்- உயிர்வாழப்பெற்றதென்ன--
செயன்மறுத்திலாத-தொழில்களின்பிலாத—ஒன்று-ஒருபொ
ருளானது—உலகில்- சகத்திலகண—ஐயப்பா சந்தேகமில்
லாமல—யாதிலுமெய்தும்-எதிலுமிருக்கும் பொருடா
ன்- அவ்வஸ்துவானது— வெய்யபோகத்தாலொழிந்து- மயக்க
முள்ள(விஷய) போகத்தினால்விடுபட்டு - - மேல்வருநெறியாது-

மேலேவருமார்க்கமெது—(எ-று.) [இ-ரு-க-ம்] சகலமுமனித்தியவஸ்துவெனவறிந்துநீக்கி நித்தியவஸ்துவை விசாரிக்கத்தொடங்கினதாம். (௰௮)

(முன்பிதாபோதித்தவனுபவஞ்சொல்லுகப்படல்.)

அழிவிலாததாயன்னியமாகியவதுசேர் ... ... ... ... ... ... ... *
வழியதேதெனச்சிந்திப்பான்மனத்தொன்றைநினைந்து ... ... *
மொழியலுற்றனனறிந்தனமென்றொருநொடியில ... ... ... *
விழிபெருத்திடப்புருவமேலேற்றினன்வியந்தான் ... ... ... *

(இ-ள்.) அழிவிலாததாய்- அழிவற்றதாகியும்— அன்னியமாகிய- விடயத்துக்கயலாகியுமிருக்கின்ற—அதுசேர்- அப்பொருளைச்சேருகின்ற—வழியதேதென- மார்க்கமெதுவென்று—சிந்திப்பான்- சிந்திக்கும்பொருட்டு—மனத்தொன்றைநினைந்து- மனதிலொன்றைச்சிந்தித்து—விழிபெருத்திட- கண்கள்மலர—புருவமேலேற்றினன்- புருவத்தைநெறித்து--வியந்தான்- அதிசயித்து--ஒருநொடியில்- ஒருகணத்தில்— அறிந்தனமென்று- அறிந்தோமென்று--மொழியலுற்றனன்-சொல்லத்தொடங்கினான்-(எ-று.)

(அஃதையாலோசனைசெய்தல்.)

தன்னதுள்ளுறநினைத்ததுவிளம்பினன்றானே ... ... ... *
முன்னமிங்கியான்கேட்டனன்முழுதுணர்முதன்மை ... ... *
யென்னரும்பிதாவிரோசனன்றன்னையிப்படியே ... ... ... *
அன்னவன்புகன்றனனெனவிவையெலாமறைவான் ... ... ... *

(இ-ள்.) தன்னதுள்ளுற- தனதுள்ளத்திற்பொருந்த—நினைத்தது- நினைத்ததை— தானேவிளம்பினன்- தானேசொல்லினன்—முழுதுணர்முதன்மை - எல்லாமுணர்ந்த முதன்மையான—என்னரும்பிதா - எனதரியபிதாவாகிய--விரோசனன்றன்னை -விரோசனனை—முன்னமிங்கியான்கேட்டனன் - பூர்வமிவ்விடத்தியான்கேட்டேன்—இப்படியே- இந்தப்பிரகாரமே— அன்னவன்புகன்றனன- அவருஞ்சொன்னார் — இவையெலாமறைவான்- (மாபலியானவ) னிவைகளனைத்தையுஞ்சொல்லுவான்—(எ-று.)

(நித்தியவஸ்துயாதெனவிசாரித்ததனை மனனஞ்செய்தல்.

ஐயதுன்பமுமின்பமுமென்பனவனைத்தின் ... ... ... ... *
மையலியாவையுமடிந்ததோரிடமெதுமனத்தின் ... ... ... *
வெய்யமோகத்திரிடமெதுவேட்கைகளெல்லாங் ... ... ... *
கையறப்பட்டவிடமெதுகருணையாலுளாயாய் ... ... ... *

(இ-ள்.) ஐய- (எனது) பிதாவே— துன்பமும்- துக்கமும்— இன்பமும் சுகமும்— என்பன- என்றுசொல்லப்படுவனவாகிய— அனைத்தின்- சகலத்தினுடைய— மையலியானவையும்- மயக்கங்களனைத்தும்— மடிந்தொழிடமேது - இறந்துவெட்டப்பற்றவிடமியாது— மனத்தின்வெட்டமோகம்- மனதின்கொடியமோகமானது— தீரிடமேது - தீர்கின்றவிடமியாது — வேட்கைகளெல்லாம்- ஆசைகளனைத்தும்— கடநட்பட்டவிடமேது - புறநமவிடப்பட்டவிடமியாது — கருணையாளனையாய் - தயவாகவநுக்கிரகஞ் செய்வாய்— (எ-று.) (உக)

(இதுவுமது.)

நிராசையாகியேயிளைப்பெலாநீங்கிடமேது ... ... ... ... ... ... *
விராவுபேரின்பத்தழகிதாய்விரிவிடமேது... ... ... ... ... *
பராபரந்தெளிந்துணரநீபகர்ந்தெனெஞ்சை ... ... ... ... *
யராவுதுன்பம்விட்டிளைப்பெலாமாறுதற்கென்றேன் ... ... ... *

(இ-ள்.) நிராசையாகி- ஆசையற்றதாய் — இளைப்பெலாநீங்கிடமேது - இளைப்புகளனைத்தும்விடுபடும் (விஸ்ராந்திஸ்தான) மியாது— விராவுபேரின்பத்தழகிதாய் - மிகுந்தபேரானந்தசுந்தரமாகி—விரிவிடமேது- வியாபித்திருக்கின்றவிடமியாது-- பராபரம் பராபரத்தை—தெளிந்துணர்ந்த நீ- தெளிந்தறிந்திருக்கின்ற நீ— என்னெஞ்சை- என்மனதை— அராவுதுன்பம்விட்டு- அறுத்துக்கொண்டிருக்கின்ற துன்பத்தைவிடுத்து — இளைப்பெலாமாறுதற்கு- இளைப்புகளனைத்துநீங்குதற்கு— பகர்தியென்றேன்- சொல்லென்றுகேட்டேன்— (எ-று.) [இ-ச க-ம்] துக்கநிவர்த்தியாய்த்தடையற்றவாநந்தத்தை யடையவிருப்பினதாம். (உஉ)

{ சித்தையரசாங்கமாகத்தொகுத்துக்கூறத் தொடங்கித்தேயவிலக்கணங்கூறல். }

எந்தையப்பொழுதுரைசெய்வான்மைந்தகேளியம்ப ... ... ... *
வந்தமற்றறவிசாலமாயளவறவகன்று ... ... ... ... ... ... ... *
சுந்தரத்ததோர்தேசமுண்டண்டத்தின்றொகுதி ... ... ... ... *
[illegible]சிறந்திருந்திறப்பதற்கிடமதாய்வயங்கும் ... ... ... ... ... *

(இ-ள்.) எந்தை- எனதுபிதாவானவர் — அப்பொழுதுரைசெய்வான்- அப்போதுசொல்லுவார்— இயம்ப- (யான்) சொல்ல— மைந்த கேள்- மகனே கேட்பாய் —அந்தமற்று- முடிவில்லாமல் — அறவிசாலமாய்- மிகவும்வியாபகமாகியும்— அளவறவகன்று- மட்டற்றவிஸ்தாரமாகியும்— சுந்தரத்ததாம்- அழகுள்ளதாகியும்

ருக்கின்ற — தேசமுண்டு - ஓர்தேயமுள்ளது — அண்டத்தின்றொகு தி - அண்டத்தினது கூட்டங்கள் — வந்துதித்து - வந்துண்டாகி — இருந்து - விளங்கி — இறப்பதற்கு - நசிப்பதற்கு — இடமதாய்வயங்கும் - (அதுவே) யிடமாகப்ரகாசிக்கும் — (எ-று.) (உங)

(அரசனிலக்கணங்கூறல்.)

ஆயதேயத்திலைம்பெரும்பூதமுமில்லைச் - - - *
செயருநிலைவனமில்லைதீர்த்தங்களில்லைத் - - *
தூயதேவர்முதலியதொல்லுயிரில்லை - - - *
நாயகன்பெருஞ்சுடரொளியொருவனேநண்ணும் - *

(இ-ள்.) ஆயதேயத்தில் - (இப்படி) யாகியதேசத்தில் -- ஐம்பெரும்பூதமுமில்லை - பஞ்சமகாபூதங்களுமில்லை — செயருநிலை - நீண்டமலைகளுமில்லை — வனமில்லை - (நீண்ட) காடுகளுமில்லை — தீர்த்தங்களில்லை - (நீண்ட) தீர்த்தங்களுமில்லை — தூயதேவர்முதலிய - பரிசுத்தமுள்ளதேவர்கண்முதலாகிய — தொல்லுயிரில்லை - பழமையானவாத்மாக்களுமில்லை -- பெருஞ்சுடரொளும் - மகாப்ரகாசமென்கின்ற — நாயகன் - அரசன் — ஒருவனேநண்ணும் - ஒருத்தனேயிருக்கின்றான் — (எ-று.) (உச)

(அமைச்சரிலக்கணங்கூறல்.)

முழுதுங்காண்பவன் முழுதினுஞ்செறிபவன் முதல்வன் *
பழுதில்சாந்தனாய்நிறைந்துவாளாவுறைபண்போன் - *
வழுவிலாவிவனுக்கியமந்திரிவசத்தாற் - - - - - *
றழுவுசெய்கைகளியாவையுநடத்திடுந்தானே - - - *

(இ-ள்.) முழுதுங்காண்பவன் - சர்வஞ்ஞனாகியும் — முழுதினுஞ்செறிபவன் - சர்வவியாபகனாகியும் — முதல்வன் - சர்வகாரணனாகியும் — பழுதில்சாந்தனாய் - குற்றமற்றவுபசாந்தனாகியும் — நிறைந்து - பரிபூரணமாய் — வாளாவுறை - மௌனமாயிருக்கின்ற — பண்போன் - குணத்தையுடையவன் — வழுவிலாவிவனுக்கிய - தவறில்லாதவிவ்வரசனாலமைத்த — மந்திரிவசத்தால் - மந்திரியினதுவசமாக — தழுவுசெய்கைகளியாவையும் - தழுவாநின்றதொழில்களனைத்தையும் — தானேநடத்திடும் - தானேநடத்திவிக்கும்.(எ-று.

(இதுவுமது.)

இல்லதுள்ளதாமுள்ளதுமில்லதாமிமைப்பிற் - - - *
புல்லுமந்திரிநினைத்திடிலிவனென்றும்புகக - - *
வல்லதில்லையொன்றறிகிலன்மன்னனைவிடாது - - *
செல்லுந்தன்மையாற்சேவலமனைத்தையுஞ்செய்யும் - - *

(இ-ள்) விரிவருந்திறலந்தமந்திரி - கெடுதற்கரியபலமுள்ளவ்வமைச்சன் — அந்தவேந்தாலெரித்துவென்றிடில் - அவ்வரசனையெரித்தாகச்செயித்தால் — வணங்குறும் - (அவனுக்கு) வணங்குவான் — இவ்வகையின்மேல் - இப்படியிலாவிடின் — அரியமேருவை - குளிர்ந்தமகாமேருவை — அசைப்பினும் - அசைத்தாலும் — அசைப்பரிதாகும் - (இவனை) யசைக்கக்கூடாததாம் — ஒளிகொள் - பிரகாசம்பொருந்திய — ஊகபுந்தியினலால் - அநுபவபுத்தியையுடைய வறிவினலல்லாமல் — ஒருங்குவெலப்படான் - முழுதுஞ்செயிக்கப்படான் — (எ-று.) (௰௧)

(சித்தருவகத்தைவெளிப்படுத்திச் சொல்லத்தொடங்கல்.)

ஊகபுந்தி யாலல்லதவ்வமைச்சனையுற்றால் - - - *
வேகநாகம்போலெரித்திடும்வேந்தனோடமைச்ச - *
னேகராச்சியஞ்செய்யுமத்தேசமுமியாவுந் - - *
சோகமற்றிடக்கேளெனவிரித்திதுசொன்னான் - - *

(இ-ள்.) ஊகபுந்தியாலல்லது - அநுபவபுத்தியையுடையவறிவினலல்லாமல் — அவ்வமைச்சனையுற்றால் - அந்தமந்திரியைப்பொருந்தினால் — வேகநாகம்போல் - கோபத்தையுடைய சர்ப்பத்தைப்போல — எரித்திடும் - எரிப்பான் — வேந்தனோடும் - அரசனோடும் — அமைச்சன் - மந்திரியானவன் — ஏகராச்சியஞ்செய்யும் - தனியேயரசாக்ஷிசெய்கின்ற — அத்தேசமுமியாவும் - அந்தத்தேசமுமதிலுள்ள) சகலமும் — சோகமற்றிடக்கேளென - (உனது) துன்பமறும்பொருட்டு கேட்பாயென்று — விரித்திதுசொன்னான் - பிரித்திதைச்சொன்னான் — (எ-று.) (௰௨)

(தேசமுதலியமூன்றையுங்கூறல்.)

முன்னநான்சொன்னதேசமோர்முடிவிலாமுத்தி - - *
மன்னனென்றதுமாசிலாமணியெனவயங்குந் - - *
தன்னில்வேறிலாவாத்துமதத்துவந்தானே - - *
யன்னவேந்தனாலமைத்தமந்திரிமனமாகும் - - *

(இ-ள்.) முன்னம் - முன்னமே — நான்சொன்னதேசம் - யான்சொல்லியதேசமானது — ஓர்முடிவிலாமுத்தி - ஒப்பற்ற முடிவிறந்தமோக்ஷமாகும் — மன்னனென்றது - இராசாவென்றுசொல்லியது — மாசிலாமணியென - களங்கமற்ற விரத்தினத்தைப்போல — வயங்கும் - பிரகாசிக்கின்ற — தன்னில்வேறிலா - தன்னிடத்தில் வேறுபடாத — ஆத்துமதத்துவந்தானே - ஆத்மதத்துவமேயாகு

ம் — அன்னவேந்தனால் - அப்படிப்பட்டவரசனால் — அமைத்தமந்திரி - படைத்தமந்திரியானவன் — மனமாகும் - மனமாகும் (எ-று)

(பூகமென்பதைக்கூறல்.)

விடையமியாவையுமொருப்படவொருக்கிநல்விரா - *
கூடைமையாவதுபரமமாம்பூகமென்றுரைத்தேந் - *
தடையிலாமனம்விராகத்தால்வெலப்பட்டதன்மை - *
படைசெய்மத்தமாதொழுவத்துளகப்பட்டபண்பே - *

(இ-ள்.) விடையமியாவையும் - விடயங்களனைத்தையும் — ஒருப்படவொருக்கி - ஒருமிக்கக்கெடுத்து — நல்விராகம் - நல்லவைராக்கியத்தை — உடைமையாவது - உடையதாவதே — பரமமாம்பூகமென்றுரைத்தேம் - மேலானதிதிக்ஷையென்றுசொன்னோம் — தடையிலாமனம் - தடையற்றமனமானது — விராகத்தால் - நிராசையினால் — வெலப்பட்டதன்மை - வெல்லப்பட்ட குணமானது — படைசெய்மத்தமா - சண்டைசெய்கின்ற மதத்தையுடைய யானையானது — தொழுவத்துள் - தொழுவத்தினுள் — அகப்பட்டபண்பு - அகப்பட்டதன்மையாம் — (எ-று.) [இ-சா-க-ம்] தேயமுதலிய நான்கையு முத்திமுதலிய நான்காகப் பிரித்துச்சொன்னதாம்.

{ பிரமத்தைப்பரசாங்கமாக வுருவகப்படுத்தி யதைச்செயிக்கு முத்திலைய மூன்று விதமாகக் கூறத்தொடங்கி முக்குத்தியைக்கூறல். }

கற்றறிந்திலார்மனத்தைநாற்கூறெனக்கற்பித் - - *
துற்றபோகத்திலுபயமுநூல்வழியொன்றும் - - *
பெற்றதேசிகன்பூசையிலொன்றுமாய்ப்பேணிற் - *
றுற்றகங்குல்போய்விவேகமாஞ்சுடர்வந்துதோன்றும் - *

(இ-ள்.) கற்றறிந்திலார்மனத்தை - (ஞானநூலை) யுணர்ந்தறியாதவர்களின்மனதை — நாற்கூறெனக்கற்பித்து - நான்குபங்காகப்பிரித்து — உற்றபோகத்திலுபயமும் - அடைந்தவிடயபோகங்களி லிரண்டுபங்கும் — நூல்வழியொன்றும் - (ஞான) சாஸ்திரமார்க்கத்திலொருபங்கும் — பெற்றதேசிகன் பூசையிலொன்றுமாய் - (அனுக்கிரகம்) பெற்றவாசாரிய ராராதனையி லொருபங்காகவும் — பேணில் - செலுத்தினால் — துற்றகங்குல்போய் - நிறைந்த (வஞ்ஞா) னந்தகாரம்போய் — விவேகமாஞ்சுடர் - ஞானப்பிரகாசமானது — வந்துதோன்றும் - வந்துநிற்கும் — (எ-று.) (௫௫)

(இ-ள்.) மிக்கவறிவால் - மிகுந்தவறிவினாலும் — விசாரத்தால் - விசாரணையினாலும் — மெய்ம்மையுணர்வும் - ஆத்மதரிசனமும் — நிராசையும் - விராகமும் — நீயொக்க - நீயொருமிக்க — என்றுங் கைக்கொள்வாய் - எப்போதுங் கைவசமாக்குவாய் — ஊற்றமான நிராசையினால் - நிலையாகியவிராகத்தினால் — தக்கவிசாரம் - தகுந்த (வாத்ம) விசாரணையும் — விசாரத்தால் - (அவ்வாத்ம) விசாரணையினால் — தவிரா நிராசை - ஒழிவில்லாதவிராகமும் — தம்மாற்றம் - ஒன்றுக்கொன்று — தொக்குநிரம்பும்வாரிதியும் - தொகுப்பாய் நிறைந்தசமுத்திரமும் — தொடர்மேகமும் - தொடர்பானமேகமும் ணுதல்போலாம் - அமைவதுபோலவாம் — (எ-று.)

(இச்சகாயத்தோடு முத்தியையடையுமாறு கூறல்.)

நாட்டினியல்புவழுவாமனட்டோர்க்கிதமா நற்பொருள்க - *
ளீட்டிமுனைமதனாலேயினியகுணத்தினுயர்ந்தோரைக் - *
கூட்டியவரானிராசையினைக்கூடியதனால்விசாரத்தைத் - - *
தீட்டிடதனான்மெய்ஞ்ஞானந்தெளிந்தான்முத்திசித்திக்கும் *

(இ-ள்.) நாட்டினியல்புவழுவாமல் - தேசாசாரந்தவறாமல் — நட்டோர்க்கிதமாம் - உறவினர்க்குறித்தான — நற்பொருள்களீட்டி - நல்லதிரவியங்களைச்சம்பாதித்து — முனைமதனால் - முன்பப் பொருளினால் — இனியகுணத்தில் - இனிமையான (சாத்மீக) குணத்தில் — உயர்ந்தோரைக்கூட்டி - மேன்மையானவர்களைச்சேர்ந்து — அவரால - அவர்களால் — நிராசையினைக்கூடி - வயிராக்கியத்தையடைந்து — அதனால் - அந்தவயிராக்கியத்தினால் — விசாரத்தைத்தீட்டி - (ஆத்ம) விசாரணையைச்செய்து — அதனால் - அந்தவிசாரணையினால் — மெய்ஞ்ஞானந்தெளிந்தால் - உண்மை ஞானத்தைத்தெளிவுற்றால் — முத்திசித்திக்கும் - மோக்ஷமுண்டாகும் — (எ-று.) (௩௧)

(முன்விசாரித்தவனுபவத்தைமனனஞ்செய்திருந்தசுகித்தல்.)

என்றுமுன்னமென்றந்தையிசைத்தான்றெய்வசகாயத்தா - *
லொன்றுமொழியாதின்றுணர்ந்தேனுணர்வுபெற்றேன்போகத் - *
தின்றவாசையின்றொழித்துநிராசையென்னுநிதியாலே - [தி *
னின்றிநொய்தாயுபசாந்தச்சுவையிற்குளிர்ந்தசுகம்பெற்றேன் *

(இ-ள்.) என்றுமுன்னமென்றந்தை - இப்படியென்றுமுன்னமேயெனதுபிதாவானவர் — இசைத்தான் - சொன்னார் — தெய்வசகாயத்தால - தெய்வசகாயத்தினால் — ஒன்றுமொழியாது - ஒன்றையும்விடாமல் — இன்றுணர்ந்தேன் - இப்பொழுதறிந்தேன் — உண

ர்வுபெற்றேன் - ஞானத்தையடைந்தேன் — போகத்தினின்றவா
ஸை - போகத்திலிருந்தவிச்சையை — இன்றொழித்து - இப்போது
நீக்கி — நிராசையென்னு நிதியாலேதுன்றி - விராகமென்கின்ற
செல்வத்தினிறைந்து — நோய்தாய் - சொச்சமாய் — உபசாந்த
ச்சுதையில் - உபசாந்தமென்னுமமிர்தத்தினால் — குளிர்ந்தசுகம்
பெற்றேன் - சீதளமானபரமசுகத்தை யடைந்தேன் — (எ-று.) *

(நிதித்தியிற்காட்சிப்படலம்.)

அந்தோவந்தோவிது நெடுநாளறிந்திலேனின்றறிவுற்ற ...... *
சந்தோடத்தையென்சொல்வேன்சகலநினைவுஞ்சமித்தாறி ... *
நொந்தோரின்பதுன்பத்தாலேவாதிருக்குமிடமிதுவே ......*
யுய்ந்தோருறையும்பதமிதுவேயுபசாந்தத்தினுயர்விதுவே. ...*

(இ-ள்.) அந்தோவந்தோ - அகோவகோ — இது - இவ்வனுபவத்தை — நெடுநாளறிந்திலன் - வெகுநாளறியாதவனானேன் — இன்றறிவுற்றசந்தோடத்தை - இப்போதறிந்த மகிழ்ச்சியை — என்சொல்வேன் - என்னவென்றுசொல்லுவேன் — சகலநினைவுஞ்சமித்தாறி - எல்லாநினைவுகளுமுபசாந்தமாய் — இன்பதுன்பத்தால் - சுகதுக்கங்களினால் — நொந்தோர் - துன்பமுற்றவர்கள் — நோவாதிருக்குமிடமிதுவே - வருந்தாமலிருக்கின்றவிடமிதுதான் — உய்ந்தோருறையும்பதமிதுவே ஆத்மவாழ்வையடைந்தவர்கள்பொருந்தாநின்றபதமிதுதான் — உபசாந்தத்தின் - உபசமனத்தினுடைய — உயர்விதுவே - மாக்ஷிமையிதுதான் — (எ-று.) (சக)

{பரோக்ஷார்த்தத்திற்சந்தேகநீங்கியபரோக்ஷமா
யதனினிற்றற்பொருட்டாசிரியரைச்சிந்தித்தல்.}

என்னவுரைத்துநானாரென்னுருவமேதென்றியான்விளங்கத் ....*
தன்னையறிசுக்கிரனைத்தாழ்ந்துவினவிதத்துவத்தை ...... *
யுன்னும்பொழுதேயஞ்ஞானமோடுமென்னவுசனவை... [பால்
முன்னவேண்டுமெனக்கண்கண் முகிழ்த்துநினைந்தான் முழுநன்

(இ-ள்.) என்னவுரைத்து - இப்படியென்றுசொல்லி — நானார் - யானார் — என்னுருவமேதென்று - எனதுஸ்வரூபமியாதென்றுவிசாரித்து — இயான்விளங்க - நான்பிரகாசிக்கும்படி — தன்னையறியுஞ்சுக்கிரனை - தனதுஸ்வரூபத்தையுணர்ந்திருக்கின்ற (நமதுகுருவாகிய) சுக்கிராசாரியரை — தாழ்ந்து - வணங்கி — வினவி - விசாரித்து — தத்துவத்தை - உண்மையை — உன்னும்பொழுது - நினைக்குமளவில் — அஞ்ஞானமோடுமென்ன - அஞ்ஞானங்கெடுமென்று (நினைத்து) — உசனவை - சுக்கிராசாரியரை — முன்னவேண்டு

மெனை-நினைக்கவேண்டுமென்று—கண்கண்முகிழ்த்து - கண்களை
க்குவித்து—முழுதன்பால்- பூரணமானவன்பினால்—நினைந்தான்
-தியானித்தான்—(எ-று.) [இ-ரு-க-ம்] முத்தியையடைதற்குத்தி
யுமவ்வுத்திக்குச்சகாயமு மச்சகாயத்துக்குச் சாதனமுமாகியவி
வைகளையறிவித்ததாம். (௪௨)

(ஆசிரியனைத்தரிசித்துத்துதித்தல்.)

மெய்யாகியசச்சிதாநந்தவெளியேவடிவாகியவெள்ளி ... .... *
யுய்யாநின்றமாவலிமுன்னுதிப்பவவனுமுவந்திறைஞ்சிக் .....*
கையார்மணியாலுயர்மலராற்காலிலருச்சித்துரைசெய்வா......*
னையாநின்னன்பெனையெழுப்பவடியேனுரைப்பதறிந்தருள்வாய்

(இ-ள்.) மெய்யாகிய-உண்மையான—சச்சிதாநந்தவெளியே-
சச்சிதாநந்தவாகாயமே--வடிவாகியவெள்ளி-ஸ்வரூபமாயிருக்கி
ன்றசுக்கிராசாரியார்—உய்யாநின்ற-ஆத்மவாழ்வையடையாநின்
ற—மாவலிமுன்னுதிப்ப- மாவலியின்முன்னேதோன்ற—அவனு
முவந்திறைஞ்சி- அவ்வரசனுமகிழ்ச்சியோடும்வணங்கி—கையார்ம
ணியால்-கையினிறைந்த விரத்தினங்களினாலும்— உயர்மலரால்-
நல்லபுட்பங்களினாலும்--காலிலருச்சித்து- பாதத்திலருச்சனைசெ
ய்து— உரைசெய்வான்-(மாவலி) சொல்லுவான்—ஐயா- எனதா
சாரியனே—நின்னன்பெனையெழுப்ப - தேவரீரருளானதென்னை
த்தூண்ட— அடியேனுரைப்பது-அடியேன்சொல்லுவதை—அ
றிந்தருள்வாய்- கேட்டனுக்கிரகஞ்செய்வாய்—(எ-று.) (௪௩)

(உலகமுதலியவேழிலுமிருக்கின்ற தியாதெனவிசாரித்தல்.)

என்னிங்குள்ளதப்பாலென்னெல்லைசொல்லப்பட்டுளதென்....*
றுன்னுமெல்லையிலாதென்சொல்லுநாரார்நீயாரிம்... ... ... *
மன்னுமுலகமேதென்றுமயக்கந்திரவருளென்ன ... ... ... ...*
வன்னதெல்லாந்தெரியவிரித்தவனுக்கிவனன்றறிவித்தான்.....*

(இ-ள்.) இங்குள்ளதென் - இவ்விடத்துள்ளதென்ன— அப்பா
லென்-அப்பாலிருக்கின்றதென்ன— எல்லைசொல்லப்பட்டுளதெ
ன்-அளவுசொல்லப்பட்டதென்ன —துன்னுமெல்லையிலாதென்
-நெருங்கியவளவில்லாததென்ன—சொல்லுநாரார் - பேசுகின்றா
யாரார்—நீயார்- (கேட்கின்ற) நீயார்—இம்மன்னுமுலகமேதெ
ன்று-இந்தநிலைபெற்றசகமியாதென்று— மயக்கந்திரவருளென்
ன-மயக்கந்தீரும்படி யனுக்கிரகஞ்செய்வாயென்றுகேட்க—அ
ன்னதெல்லாம்- அவன்கேட்டசகலமும்—தெரியவிரித்து- தெரி

டப்படி பகுத்து—அவனுக்கு—அந்தமாக விக்கு—இவன்- இச்சுக்கிராசாரியரானவர்—தன்றறிவித்தான்-நன்றாகத்தெரிவித்தார்—(எ-று.) (௪௪)

{இவ்வெழுமுதலியயாவுஞ்சின்மாத்திரமேயென வுபதேசித்தல்.}

வருங்கற்பகவிண்விரைந்தேகவந்தேன்பலசொல்லியும்பயனென்
சுருங்கச்சொலலும்படங்கேளாய்தோன்றவிங்குள்ளவுஞ்சித்*
தொருங்கப்புறத்துஞ்சித்தெல்லையுள்ளதுஞ்சித்தெல்லையற ... *
றொருங்குற்றதுஞ்சித்தியான்சித்துநீசித்துலகநிறைசித்தே ... *

(இ-ள்.) வருங்கற்பகவிண்ண—வளருகின்ற கற்பக விருக்ஷத்தையுடைய தேவலோகத்துக்கு—விரைந்தேகவந்தேன்-விரைவோடுஞ்செல்லவந்தேன்—பலசொல்லியும்பயனென்-பலவாகப்பேசியும்ப்ரயோசனமென்ன—சுருங்கச்சொல்லும்-சுருக்கமாகச்சொல்லுகின்ற—படங்கேளாய்-ப்ரயோசனத்தைக்கேட்பாய்—தோன்றவிங்குள்ளவும்-தோற்றமாகவிவ்விடத்துள்ளதுவும்—சித்து-ஞானமே—ஒருங்கப்புறத்தும்-சமஸ்தமானபுறப்பிலுள்ளவிடங்களும்—சித்து-ஞானமே—எல்லையுள்ளதும்-அளவுள்ளதும்—சித்து-ஞானமே—எல்லையற்றொருங்குற்றதும்-அளவில்லாமற்செறிவுள்ளதும்—சித்து-ஞானமே—யான்சித்து-(சொல்லுகின்ற) யானுஞானமே—நீசித்து-(கேட்கின்ற) நீயுஞானமே—உலகநிறைசித்தே-சகலசம்பூரணஞானமே—(எ-று.) (௪௫)

(இவ்வுபதேசத்திலழுந்தென்றருளியேகுதல்)

இதுவேசுருக்கமிவ்வுறுதியிதயங்கொண்டிவ்வகைக்கேற்ற......*
மதியானின்னைநினைநீயேமாறுணர்ந்துநோக்குதியே .... ... *
லதனாலந்தமாம்பதத்தையடைதியோரேழுந்தவரும்... .......*
புநிதோர்தெய்வகாரியத்திற்புகுந்தாரியாரும்போகுதுமால்.. *

(இ-ள்.) இதுவேசுருக்கம்-இந்நிலையேசுருக்கமாம்—இவ்வுறுதி-இச்சித்தாந்தத்தை—இதயங்கொண்டு-மனதிற்றரித்துக்கொண்டு—இவ்வகைக்கேற்றமதியால்-இவ்வகைகளுக்குரியவறிவினால்—நின்னை-உனதுஸ்வரூபத்தை—நீயேநினை-நீயேசிந்திப்பாய்—மாறுணர்ந்து-திரிவின்றியறிந்து—நோக்குதியேல்-பார்ப்பாயானால்—அதனால்-அதினால்—அந்தமாம்பதத்தையடைதி-முடிவானபரமபதத்தையடையக்கடவாய்—ஓரேழுந்தவரும்-ஒப்பற்றரியதவத்தையுடைய சத்தரிஷிகளும்—புநிதோர்தெய்வகாரி

யத்தில்- நூதனமாயொருதெய்வகாரியத்தில்—புகுந்தார்-ப்ரவேசித்தார்கள்—இயாமும்போகுதும்-நாமும்போவோம்—(எ-று.)

(இவனனுபவத்தையுமனவித்தல்)

என்றுவெள்ளியேகியபின்னெலாமறிவாமுலகினைப்பார்த்......*
துன்னியொக்குமொக்குமெனக்குசனுரைத்ததுண்மையதே*
மூன்றுமவனிசித்துலகமூன்றுஞ்சித்துநான்சித்து ... ... .... *
நன்றுலாந்திசைசித்துநாட்டுகின்றதெலாஞ்சித்தே ... ... ..*

(இ-ள்.) என்று- (இப்படி) யென்றுசொல்லி—வெள்ளியேகியபின்-சுக்கிராசாரியர்போனபின்பு—எலாமறிவாம்- சகலஞானமாகிய—உலகினைப்பார்த்து - சகத்தைப்பார்த்து—உன்னி-நினைத்து—ஒக்குமொக்கும்- ஒவ்வுமொவ்வும்—எனக்கு-என்றனக்கு—உசனுரைத்தது- சுக்கிராசாரியராற் சொல்லியது—உண்மையதே-யதார்த்தமே—மூன்றுமவனிசித்து- மூதண்மையாகிய பூமியுஞானமே—உலகமூன்றுஞ்சித்து- திரிலோகமுஞானமே—நான்சித்து-எனதுஸ்வரூபமுஞானமே—நன்றுலாந்திசைசித்து நல்லநான்குதிக்குகளுஞானமே—நாட்டுகின்றதெலாஞ்சித்தே-ஸ்தாபிக்குங்கிரியைகளனைத்துஞானமே—(எ-று.) (௪௭)

(நிதிதியிற்காக்ஷிப்படல்.)

தெரிக்கும்பொருளுந்தரிசனமுந்தீர்ந்துவெறுநின்மலவடிவாய்ப்
புரிக்குமுதயம்விடாதென்றும்பொலியும்பரமப்பொருளானேன்
வரிக்குங்காட்சியிலாவறிவேவடிவாயொருகாலெயெங்கும்......*
விரிக்குநிறைவாயுபசாந்தவெளியாயறிவாமிகுபொருளோன்......*

(இ-ள்.) தெரிக்கும்பொருளும்- காணப்படுந்திரிஸ்யமும்—தரிசனமும்-காக்ஷியும்—தீர்ந்து-ஒழிந்து — வெறுநின்மலவடிவாய்-கேவலகளங்கமற்றஸ்வரூபமாய்—புரிக்குமுதயம்விடாது-விளங்குகின்றசதோதயமாய்—என்றும்- எப்பொழுதும்—பொலியும்பரமப்பொருளானேன் - பரகாசிக்கின்ற பிரமவஸ்துவானேன்—வரிக்குங்காட்சியிலா-பந்தப்படுத்துகின்றவிடயமில்லாத—அறிவேவடிவாய்-ஞானமேயுருவமாய்—ஒருகால-ஏககாலத்திலே—எங்கும்-எவ்விடத்தும்—விரிக்குநிறைவாய் வியாபகமாகியும்—உபசாந்தவெளியாய் - உபசமனமானஞானாகாசமாகியும்— அறிவாம்-அறிவாகியுமிருக்கின்ற—மிகுபொருளோன்- மகத்தாகியபூரணவஸ்துவேயான்—(எ-று.) (௪௮)

(சமாதியடைதல்)

ஓங்குஞ்சின்மாத்திரப்பொருளாமோங்காரத்தையுண்ணினைந்து*
தூங்குந்திரியானபராசக்திதொடர்சங்கற்பமெல்லாம்போய்.... *

ஙகுந்தொழிலேடணையயமனஞானஞேயமிவை.........*
ஙகுஞாதாவனைத்துமறத்தனிச்சித்ரம்போனெடிருந்தான்,

(இ-ள்.) ஓங்கும்-ஓங்காநின்ற—சின்மாத்திரப்பொருளாம்-ஞா
மாத்திராரித்தமாகய—ஓங்காரத்தை-ப்ரணவஸ்வரூபத்தை—உ
ணினைந்து-மனதிற்சிந்தித்து—தாங்குந்தியானபரனுகி-அறி
யிலானதியானுருடனுய்— தொடர்சங்கற்பமெல்லாம்போய்-
தாடராநின்றசங்கற்பங்களனைத்தும்விட்டுப்பட்டு— வாங்குந்தொ
ல்-கொள்ளாநின்றசெயல்களும்—எடணை-ஈடணைத்திரியமும்—
யம்-சந்தேகமும்—டனம்-மனனமும—ஞானம்-அறிவும்—
ஞேயம்-விடயமும்—இவைதாங்குஞாதா-இவைகளைத்தாங்குகி
றஞாதாவுமாகிய—அனைத்துமற-சகலமுநீங்க—தனிச்சித்திர
போல்-தனித்தசித்திரத்தைப்போல—நெடிதிருந்தான்- வெகு
நரஞ் (சமாதியி) லிருந்தான்—(எ-று.) (௪௯)

(சச்சிதாநந்தமாய்விளங்குதல்.)

ற்றிலாதவிளக்கொளிபோற்கலங்காதிருந்தமாவலிதான்......*
ற்மையதீர்ந்தறநினைந்துசிந்தையென்னுமாசின்றித்.........*
தாற்றுஞ்சத்தாமாத்திரத்தாற்சுடர்விட்டெறித்தபடிசொல்லி.*
ாற்றமுகிறீர்சரற்காலத்தறவேதெளிந்தவிண்போலும்.........*

(இ-ள்.) காற்றிலாதவிளக்கொளிபோல்-வாயுவில்லா (விடத்து
ள) தீபப்ரகாசத்தைப்போல—கலங்காதிருந்த- சலனமற்றிருந்
—மாவலிதான் - மாவலிச்சக்ரவர்த்தியானவன்—செற்றமையதீர்ந்
-இராகத்துவேடநீங்கி—அறநிறைந்து-மிகவும்பூரணமாய்—
ந்தையென்னுமாசின்றி-சிந்தையென்கின்றகளங்கமில்லாமல்—
தாற்றுஞ்சத்தாமாத்திரத்தாற்சுடர்விட்டெறித்தபடிசொல்லிஃ-
தான்றுஞ்சத்தாமாத்திரதனு லொளிவிட்டு ப்ரகாசித்தவிதத்
தக்கூறில—ஆற்றன்முகிறீர் சாற்காலத்து- வலிமையுள்ளமேக
களில்லாத சாற்காலத்தில்— அறவேதெளிந்தவிண்போலும்-மி
வுந்தெளிந்தஆகாயத்தைப்போலுமாம்—(எ-று.) (௫௰)

(சகசத்துக்குவெளிப்படல்.)

ங்கப்படியேயவனிருப்பவனதேவற்புரிபசுர ... ... ... ... *
ாங்கற்கோயின்மேனிலத்தையுற்றுருயர்மாவலிதானு ... ....*
ங்கற்கரிபதிருவிகற்பநிலைகூர்சயாநுநெடியபோது .........*
தங்குற்றதற்பின்விழித்துணர்ந்துமமதைதீர்ந்தசிந்தையனுய்*

(இ-ள்.) ஆங்கப்படியே-அவ்விடத்தந்தப்ரகாரமே—அவனிரு
... (சமாதியி) லிருந்த— அவன்தேவர்பு...

யசுரர்- அவனதுபணியைச்செய்கின்றவவுணர்கள்—ஓங்கற்கோயின்- அரண்மனையினது—மேனிலைத்தைபுற்றார்- மேல்வீட்டையடைந்தார்கள்—உயர்மாவலிதானும்- மேன்மையானமகாபலியும்—நீங்கற்கரிய-நீங்குதற்கரிய--நிருவிகற்பம்- நிருவிகற்பமான--நிலைகூர்சமாதி- நிலைமிகுந்த சமாதியில்— நெடும்போது- வெகுநேரம்—தேங்குற்று-தங்கிநின்று—அதற்பின்- அதன்பின்பு—விழித்து-விழித்துக்கொண்டு—உணர்ந்து- அறிந்து— மமதைதீர்ந்தசிந்தையனும்-மமதையற்றமனதுடையவராய்—(எ-று.) (௫௧)

(சாக்ஷாத்கார மடைதல்.)

பற்றிலாதமனத்தாலேபயின்றிராசகாரியங்கண் ... ... .... ....*
முற்றுமியற்றியாபத்துமுதிர்சம்பத்துஞ்சமமாகக் ... ... ...*
குற்றமில்லாக்குறிப்பாலேகுறிப்புற்றின்பதுன்பத்திற் ... .... *
சற்றுமிதவாதமிழாதுசமபாவனையிற்றுறுனன் ... ... ... ... *

(இ-ள்) பற்றிலாதமனத்தால்- நிராசைபொருந்தியமனதினால்—பயின்ற-சொல்லிய— இராசகாரியங்கள்- இராசகாரியங்கள்--முற்றுமியற்றி- முழுதுஞ்செய்து—ஆபத்து- ஆபத்துக்களிடத்திலும்—முதிர்சம்பத்தும் மிகுந்தசம்பத்துக்களிடத்திலும்—சமமாக-சமதிருஷ்டியாக—குற்றமில்லாக்குறிப்பால்- குற்றமற்றகருத்தினால்—குறிப்புற்று- ஒருமைப்பாடாய்—இன்பதுன்பத்தில்- சுகதுக்கங்களில்—சற்றும்- எவ்வளவேனும்— மிதவாதமிழாது-மிதவாமலுமமிழாமலும்—சமபாவனையிற்றுறுனன்- சமபாவனையிற்றுறுகவிளங்கினான்—(எ-று.) [இ ம-க-ம்] சிரவணமுதற்சாக்ஷாத்காரபரியந்தமுள்ளவனுபவத்தைக்கூறியதாம். (௫௨)

{ மாவலிஞானவரசனும் மனனைமந்திரியாக்கிச் சகலமுந்
தன்வசமாயராசாக்ஷிசெய்ததுபோலச்செய்வாயெனல். }

ஓயாதவன்றனுள்ளெழுந்தவூகாபோகம்பலகோடி ... ......*
பாவாபாவம்பலகோடிபரந்ததெல்லாமிவைப்பாறி . .... ... ... *
மேவாநின்றவெவ்விடத்தெவ்விண்ணின்மண்ணில் வேட்கைகளி
றுவாநின்றபடனந்நன்னைத்தன்னதிதயத்துள்வைப்பாய் ... ... [௫௩

(இ-ள்•) ஓவாது-ஒழியாமல்—அவன்றன்- அவனுடைய—உள்ளெழுந்த-மனதிலுண்டாகிய— ஊகம்-இஷ்டசிந்தனையும்—அபோகம்-அநிஷ்டசிந்தனையும்—பலகோடி- அளவில்லாததாகவும்—பாவம்-உண்டானதும்—அபாவம்-இல்லாததுமான(பதார்த்தங்கள்)—பலகோடி- அளவிலலாததாகவும்— பரந்ததெல்லாம் விரிந்திருக்கின்றவைத்திலும்—இவைப்பாறி- விஸ்ராந்தியடை

ந்து—(பிறப்பு)எவ்விடத்திலேன்- எந்தவிடத்திலெதை — மேவாநி
னைக்கின்-பொருந்திற்றேன்—விண்ணிலு-பரத்திலும்—மண்ணில்-இக
த்திலுமுள்ள—வேட்கைகளில்- ஆசைகளில்— தாவாநின்றமனந்
தனை- பாடாநின்றமனதை — தன்னிதயத்துள்வைப்பாய்-த
னதுபரம்பரத்திலவைப்பாய்—(எ-று.) (ருங)

(மனதைச்செயித்து முத்தியடைவாயெனல்.)

எங்கெங்கேமனமோடியிளையோனென்னவீழ்ந்தழுந்து ... *
மங்கேயங்கேநின்றெழுப்பியகண்டவறிவிலடைவிப்பாய் ... *
சங்கேதமதாயிவ்வாறுசாதித்துளமாமதக்கரியை ... ... .... *
வெங்கேதமறத்தளைத்தெல்லாவிசாரத்தாலும்வீடணைவாம். ... *

(இ-ள்.) எங்கேயெங்கே-எவ்விடத்திலெவ்விடத்தில்—மனமோ
டி-மனதுசென்று—இளையோனென்ன- குழந்தைகளைப்போல—
வீழ்ந்தழுந்தும்-(விடயங்களில்)விழுந்தழுந்தாநின்றது—அங்கே
யங்கேநின்று-அவ்விடத்திலவ்விடத்திலிருந்து—எழுப்பி-எழுப்பி
—அகண்டவறிவில்-அகண்டாகாரஞானத்தில்— அடைவிப்பாய்-
அடையச்செய்வாய்— சங்கேதமதாய்-குறிப்பாய்— இவ்வாறுசா
தித்து- இந்தப்பிரகாரஞ்சாதனைசெய்து— உளமாமதக்கரியை-மன
மென்னுமதத்தியானையை —வெங்கேதமற-கொடியதுன்பமறு
ம்படி—தளைத்து-கட்டி—எல்லாவிசாரத்தாலும்-சகலவிசாரணை
யினாலும்— வீடணைவாம்- மோக்ஷமடையப்படுவதாம்—(எ-று.)
[இ-உ-க-ம்] இவ்விதமாக மனோவிச்சையைநீக்கி ஞானம்பெறு
வாயென்பதாம். (ருச)

(மாவலிகதை முற்றிற்று.)

ஆக கதை - உக ரு - கவிதை - கூா ரு.

# பிரகலாதன்கதை.

(அவதாரிகை.)

முன்கதையிலிச்சாத்தியாகபலத்தினாலுண்டான விசாரத்தாற்
சடவசாங்கஞ்சித்தசாங்கமான வனுபவத்தை யறிவித்து
இவ்வனுபவமீஸ்வரானுக்கிரகத்தினாலும் வருமென்பதை
யறிவிக்குமிப்பிரகலாதன்கதையைநிரூபிக்கிறார்.

(பகையைவசப்படுத்த வாலோசித்தல்.)

பின்னுமோர்கதைகேட்பாய்பிரகலாதப்பெயரோனுந்.... ....*
தன்னுணர்வால்மெய்ஞ்ஞானதத்துவத்தைச்சாதித்தா........*
னன்னுரைப்பாமிரணியனுமசுரவேந்தனிறந்தளவே..........*
யின்னல்கூருமவன்மைந்தனிதயநடுங்கியிவையுணர்ந்தான்......*

(இ-ள்.) பின்னும் - பின்பும்—ஒரோர்கதைகேட்பாய் - இந்த வொருகதையைச்சொல்லக்கேட்பாய்—பிரகலாதப்பெயரோனும்-பிரகலாதனென்னுநாமத்தையுடையவனும்—தன்னுணர்வால்-தனதறிவினால்—மெய்ஞ்ஞானதத்துவத்தை-மெய்ஞ்ஞானமானதத்துவஸ்வரூபத்தை—சாதித்தான் - அடைந்தான்— அன்னுரைப்பாம்- அதைச்சொல்லுவோம்— இரணியனும்- இரணியனென்னுநாமத்தையுடைய—அசுரர்வேந்தன்- தானவர்களுக்கரசன்—இறந்தளவே- மரணமடைந்தமாத்திரத்தில்— இன்னல்கூரும்- துன்பமிகுந்த —அவன்மைந்தன்- அவனதுபுத்திரன்—இதயநடுங்கி-மனநடுக்கமுற்று—இவைபுணர்ந்தான்-இவையெண்ணினான்—(எ-று.) (க)

(பகைவன்வலிமையையுணர்தல்.)

எனதுதாதைமுதலசுரரெனதுகுலத்தோரெண்ணிறந்தோர் ...*
கனகமேருவனுவெனக்காயநிலைமைபெரிதுடையோர் ...*
வனசயோனிபதிகாரமாற்றவல்லோர்தரவல்லோர், புனைவண்டு
ளவோனெனுங்கனலிற்பூளைவீபோற்பொழிந்தார் .... ...*

(இ-ள்.) எனதுதாதைமுதலசுரர்- என்னுடையபிதாமுதலியதானவர்கள்—எனதுகுலத்தோர்- என்குலத்திலுள்ளவர்கள்—எண்ணிறந்தோர்- அளவற்றவர்கள்— கனகமேருவனுவென்ன- மகாமேருவற்பமென்னும்படி— காயநிலைமை- சரீரநிலையை— பெரிதுடையோர்- பெரிதாகவுடையவர்கள் — வனசயோனிபதிகாரம்- தாமரையிடமாகப்பிறந்தபிரமாவினதிகாரத்தை—மாற்றவல்லோர்-கெடுக்கவல்லவர்கள்—தரவல்லோர்- கொடுக்கவல்லவர்கள்—புனைவண்டுளவோனெனுங்கனலில்- தரிக்கும்வாசனைபொருந்திய துளசிமாலையையுடைய விஷ்ணுவென்னு மக்கினியில்— பூளைவீபோல்- இலவம்பஞ்சிகெடுதல்போல்—பொழிந்தார்- நசித்தார்கள்—(எ-று.) (உ)

(பகைவனைச்செயிக்குமுபாயமுணர்தல்.)

அன்றொாக்கும்பேரசுரராழியுமுழிப்பெருங்காற்றுற்.... ... ...*
சின்றுகங்கள்போன்மடிந்தார்செறிநுன்மணவிற்பலகோடி...*

யமைடுத்து—சமக்குமனத்தால்- சாந்தகின்றமனதினால்—செவ்வான்-சிவந்ததாகிய—மணிப்பீத்திரம் - இரத்தினபாத்திரங்களும்—தூபம்-தூபங்களும்—தீபம்- தீபங்களும்— சுந்தமெலாங்கொடுத்து-வாசனாத்திரவியங்களனைத்தையுங்கொடுத்து—(எ-று.) (எ)

(புறத்திலாராதித்தல்.)

மணிப்பூண்களும்பீதாம்பரமும்வாடாமலருநல்லுணவும் ..... ✻
கணிப்பிலாதபொருளெல்லாங்கருத்தாற்பாவித்தர்ச்சித்து ...✻
தணிப்பிலாதவன்பான்மூன்றந்தப்புறத்தின்பொருட்டிரளால்..✻
பணிப்பாயலானைப்போலப்பரிந்துபுறத்தும்பூசித்தான் ......✻

(இ-ள்.) மணிப்பூண்களும்- இரத்தினாபரணங்களும்—பீதாம்பரமும்-சொன்னவஸ்திரங்களும்—வாடாமலரும்-வாடாத (சொன்ன) புஷ்பங்களும்—நல்லுணவும்- நல்லவடிசில்களுமாகிய—கணிப்பிலாதபொருளெல்லாம் - எண்ணிக்கையற்ற பூசாதிரவியங்களனைத்தையும்— கருத்தாற்பாவித்து - மனதினாற்பாவனைசெய்து—அர்ச்சித்து- பூசனைசெய்து—தணிப்பிலாதவன்பால் -தணிவிலாதவன்பினால்--மூன்றந்த - முன்னேகொடுத்த—புறத்தின்பொருட்டிரளால்- புறம்பிலுள்ளதிரண்ட திரவியங்களினால்—பணிப்பாயலானை- சர்ப்பசயனத்தையுடைய விஷ்ணுவை— உட்போல-அகத்திற் (பூசித்தது) போல—பரிந்துபுறத்தும்பூசித்தான்-அன்புற்றுபுறத்திற் (ஷேவக்கிரகத்திலு) மாராதனை செய்தான் —(எ-று.) (அ)

(அசுரரியாவருமாராதித்தல்.)

ஆயவாறக்கணந்தொடங்கியகண்டவடிவப்பரம்பொருளா.. ...✻
மாயனடிகளருச்சித்தானவனைப்போலவாளசுரர் .... ... ... ... ✻
தீயகுணம்விட்டெல்லோருந்திருமாற்கடிமைத்திறம்பூண்டார்..✻
மேயமன்னன்குணமன்றேவிரிந்தவுயிரின்குணந்தானே......✻

(இ-ள்.) ஆயவாறு-அருச்சித்தபடியே— அக்கணந்தொடங்கி-அந்தக்ஷணந்தொடங்கி— அகண்டவடிவம்- அகண்டாகாரஸ்வரூபமாகிய—பரம்பொருளாம்- பிரமவஸ்துவான—மாயனடிகள்-விஷ்ணுவினுடையபதங்களை—அருச்சித்தான்-ஆராதனைசெய்தான்—அவனைப்போல- அப்பிரகலாதனைப்போல—வாளசுரர்வாளாயுதத்தையுடையவவுணர்களும்—தீயகுணம்விட்டு- தீமையானகுணங்களை நீக்கி--எல்லோரும்-சகலரும்— திருமாற்கடிமைத்திறம்பூண்டார்-அரிக்கடிமைப்பட்டார்கள்—மேயமன்னன்குணமன்றே- பொருந்தியவரசனது குணமல்லவா— விரிந்தவுயிரின்

ருணந்தான்- பரந்தசீவர்களின் குணங்கள்—(எ-று.) [ஒ-ஈ-க-ம்]
பிரகலாதன்முதலியயாவரு மூர்த்தியையுபாசித்தம்மூர்த்திவடிவ
மாவார்களென்பதாம். (கூ)

(தேவர்களையமுறல்.)

திதிகாதலருமவர்க்கரசுஞ்செங்கண்மான்மேற்சினந்தீர்ந்து ....*
புதிதாகியபத்தியிலடிமைபக்கானொன்றும்புரந்தரனும். ....... *
அதிவானவருங்கேட்டலுமேதுணுக்கமோவியப்பெய்தி ..... *
பதிபாதகர்களெம்பெருமாற்கன்பாகியதென்னெனவயிர்த்தார் *

(இ-ள்.) திதிகாதலரும்-திதிபுத்திரர்களாகியவசுரர்களும்—அவ
ர்க்கரசும்-அவர்க்கரசாகியபிரகலாதனும்—செங்கண்மான்மேல்
-சிவந்தகண்களையுடைய விஷ்ணுவினிடத்தி (லிருக்கின்ற)—சி
னந்தீர்ந்து-கோபம்விட்டு—புதிதாகியபத்தியில்-நூதனமானபக்
தியினால்—அடிமைபுக்கானொன்று-அடிமைபுகுந்தானென்று—
புரந்தரனும்-தேவேந்திரனும்—ஆதிவானவரும்- ஆதிக்கின்றதே
வர்களும்—கேட்டலும்- கேட்கவும்—துணுக்கமோடு வியப்பெ
ய்தி-அச்சத்துட னச்சரியமடைந்து—அதிபாதகர்கள் - மிகுந்த
பாவத்தையுடையவர்கள்—எம்பெருமாற்கன்பாகியது-எமது பெ
ருமானுக்கன்பானது— என்னெனவயிர்த்தார்- என்னவென்றுசந்
தேகமடைந்தார்கள்—(எ-று.) (ய)

(தேவர்கள்விஞவுதல்.)

திருப்பாற்கட லிற்கண்வளருந்திருமான்முன்புசென்றணுகி......*
விருப்பாற்றுதித்திந்திரன்முதலோர்மேகமேனியனைநோக்கி...*
நெருப்பாந்தன்மையசுரரொலாநினைப்பாவித்து நின்வடிவா. ...*
யிருப்பாராலுன்மாயையெனவெண்ணிநேமிதென்னென்றே....*

(இ-ள்.) திருப்பாற்கடலில்- அழகியக்ஷீரசமுத்திரத்தில்—கண்
வளரும்-நித்திரைசெய்கின்ற—திருமான்முன்புசென்றணுகி-விஷ்
ணுவின்முன்னேபோய்ச்சேர்ந்து—விருப்பாற்றுதித்து-விருப்
பத்தினாற்றோத்திரஞ்செய்து—இந்திரன்முதலோர்-தேவேந்திரன்
முதலியதேவர்கள் — மேகமேனியனைநோக்கி - மேகநிறத்தையு
டையவிஷ்ணுவைப்பார்த்து—நெருப்பாந்தன்மை-அக்கினியா
னசுபாவத்தையுடைய—அசுரரெலாம் - தயித்தியரனைவரும் —நி
னைப்பாவித்து- உன்னைப்பாவனைசெய்து— நின்வடிவாயிருப்பா
ராஞல்-உனதுருவமாயிருப்பார்களானல்— மாயையெனவெண்
ணினேம்- (இதை) வஞ்சகமாகநினைத்தோம்— ஈதென்னென்று
-இதென்னவென்று—(எ-று.) (யக)

இயாவராலுங்காண்பரிய- எவர்களாலுந் தரிசிப்பதற்கரிய—எம்மான்-எமதுசுவாமி—அம்மா-ஆச்சரியம்—எதிர்ந்தனனென்று-பிரசன்னமானானென்று—ஆவனாவடியன்பால்- ஆகின்றபிரகாரமன்பினால்—அசோகனைவனைத்துதித்தான் - அசோகனந்தவிசிஷ்டனுவைத்தோத்திரஞ்செய்தான்—(எ-று.) (௰)

( இதுவுமது. )

அண்டமென்னுமொருவீட்டிலரியபொருள்சேர்சரக்கறையே..*
சண்டபானுவெனவுதயாத்தமமற்றொளிருந்தற்பரமே.........*
கண்டவுயிர்களனைத்திற்குங்களைகணானவனே ... .......*
புண்டரீகைநாயகமேபோற்றிபோற்றிமிகப்போற்றி... . ...*

(இ-ள்.) அண்டமென்னுமொருவீட்டில் - அண்டமென்கின்றவொப்பற்றவீட்டில்—அரியபொருள்சேர்- அரிதான பொருள்சேர்ந்திருக்கின்ற—சரக்கறையே- பண்டாரமே—சண்டபானுவென-சூரியனைப்போல—உதயாத்தமமற்று-உதயாத்தமனமில்லாமல்—ஒளிருந்தற்பரமே- பிரகாசிக்கின்றபிரமமே—கண்டவுயிர்களனைத்திற்கும்-தரிசித்தவாத்மாக்களனைவர்க்கும்—களைகணானவன்பொருளே-கருணைக்கண்ணாகியபரவஸ்துவே— புண்டரீகைநாயகமே-இலக்குமிக்கு நாயகனானவனே—போற்றிபோற்றி-வந்தனம்வந்தனம்—மிகப்போற்றி - மிகவும்வந்தனம்—(எ-று.) (௰௧)

( இதுவுமது. )

மேலோனாகிச்சகம்படைக்கும்விளையாட்டுடையவித்தகனே....*
நாலோடொருபதெனுமுலகினண்ணுவுயர்ந்தநற்பொருளே....*
யாலோனாகிக்கண்வளர்ந்தவையாமெய்யாவருணமூர்த்தி .......*
பூலோகத்திறையகமேபோற்றிபோற்றிமிகப்போற்றி... ... .... *

(இ-ள்.) மேலோனாகி- மேலானவனாய்—சகம்படைக்கும்-உலகத்தையுண்டாக்குகின்ற—விளையாட்டுடைய-லீலையையுடைய—வித்தகனே- ஞானமுடையவனே—நாலோடொருபதெனுமுலகின்-பதினான்குலகத்திலும்—நண்ணுவுயர்ந்தநற்பொருளே- சாராதமேலானநல்லவஸ்துவே—ஆலோனாகி - ஆலிலையின்கண்ணுள்ளவனாய்—கண்வளர்ந்தவையா- நித்திரைசெய்தகடவுளே — மெய்யா-தத்துவமே—அருணமூர்த்தி - தயாஸ்வரூபமே—பூலோகத்துநாயகமே- பூலோகங்களுக்குநாயகனானவனே— போற்றிபோற்றி-வந்தனம்வந்தனம்—மிகப்போற்றி-மிகவும்வந்தனம்(எ-று.)

(இ-ள்.) முன்னைப்-முன்னமே—எவனுளனே-எவனுயிருந்தயா ன்—நீர்சப்புவியாடம்பரத்தில்- இச்சகதாடம்பரத்தில்—ஆறுதிருந்தும்- நீங்காமலிருந்தும்- நின்று-நின்றும்--ஓடி-ஓடியும்--அழுது-அழுதும்—சிரித்து- நகைத்தும்—மகிழ்ந்து - களித்தும்—அயர்ந்தேன்- வருந்தினவனுகிய—யானுர்-நானெத்தன்மையன்--நானுவான- நாநாவிதமாகிய—சகமல்லேன்- உலகநானல்லன்—நகம்-மலைகளும்—கல்-கற்களும்—புல்- திரணங்களும்—மண்-மண்களும்—மரங்கடானுய்- மரங்களுமாகியும்—புறம்பாய்- புறம்பாகயும்—அசேதனமாய்- சடமாகியுமிருக்கின்ற—சகம்- (இச்) சகத்தை—நானென்னத்தக்கதுவோ- யானென்றுசொல்லத்தகுந்ததோ—(எ-று.) (உரு)

(பௌதிகமாகியதேகமுஞ்சத்தவிடயமுமியானன்றெனல்)

இல்லாவிடத்துண்டாய் மூகமௌனலாய்க்காற்றிவியங்குவதாய்ச்.*
செல்லாநின்றசிலநாளிற்சிதைந்துசடமாமுடனுமேனு... ... ....*
நில்லாதாய்ப்பொய்க்கேதோன்றிநிராகாரமதாயறிவின்றிப்...*
புல்லாவறிவிற்செவிக்குணவாய்ப்பொன்றுஞ்சத்தநானுமோ...*

(இ-ள்.) இல்லாவிடத்துண்டாய் - அசத்தினிடத்தி லுண்டானதாகியும்— மூகமௌனலாய்- மூடமென்பதாகியும்—காற்றிவியங்குவதாய்- (பிராண) வாயுவினுற் சஞ்சரிப்பதாகியும்—சொல்லாநின்றசிலநாளிற்சிதைந்து - சொல்லுகின்றவற்பகாலத்தினசிப்பதாகியுமிருக்கின்ற--சடமாமுடனுமேனு- சடமானசரீரநானுவேனு—நில்லாதாய- நிலையில்லாதாகியும்— பொய்க்கேதோன்றி- சூனியத்தினுண்டானதாகியம்—நிராகாரமதாய்- ஆகாரமில்லாததாகியும்—அறிவின்றி-அறிவில்லாததாகியும்—புல்லாவறிவில்- அற்பவுணர்வில்—செவிக்குணவாய்- காதுக்குட்புசிப்பாகியு மிருக்கின்ற—பொன்றுஞ்சத்தநானுமோ- கெடுகின்றசத்தவிடயமியானுமோ—(எ-று.) (உசு)

(பரிசவிடயமும்ரசவிடயமு மியானன்றெனல்.)

தோவிலன்றியறிவரிதாய்த்தோற்றமின்றிக்கணத்திறந்து ......*
கோலுமறிவாலறிந்தறிவுகூடாப்பரிசநானல்ல... ... .... ......*
காவிலசைந்துவசித்துருவாய்க்காதன்மிக்குகணத்திறக்குந்......*
நாலுவுணவாய்த்திரவியத்திற்சனித்துச்சடமாஞ்சுவைநாமேனு... *

(இ-ள்.) தோவிலன்றி-தொக்கிலுலல்லாமல்—அறிவரிதாய்- அறியக்கூடாததாகியும்— தோற்றமின்றி- (தனித்து) தோற்றமில்லாமல்—கணத்திறந்து- கணநேரத்தினசித்து—கோலுமறிவாலறிந்து- வியாடகஞானத்தினுலறிந்து—அறிவுகூடா- (தனக்).கறி

(சுயஞ்சித்தைத்தரிசித்தல்.)

இவனானென்றுள்ளேபற்றுமென்னையெங்கேயெல்லையறப் ...... *
புவனமெல்லாநிறைந்தொளிரும்போதவடிவாமென்றனக்குக் . *
கவருமனப்பாவனைதானேகருதிலுண்டோமுடிவிற்சுகத் ...... *
துவமையில்லாவுபசாந்தவுணர்வாங்கண்ணேயுலகங்கும் ..... *

(இ-ள்.) இவனென்றும் - இவனென்றுமியானென்றும்— உள்ளேபற்றும்-மனதிற்பற்றுகின்ற—என்னையெங்கே-நினைப்பெங்கே—எல்லையற-அளவில்லாமலிருக்கின்ற— புவனமெல்லாம்-சகங்களனைத்தும்—நிறைந்தொளிரும்-பூரணமாய்ப்பிரகாசிக்கின்ற—போதவடிவாம்-ஞானஸ்வரூபமாகிய— என்றனக்கு-எனக்கு—கவருமனப்பாவனைதானேகருதிலுண்டோ-கிரகிக்கின்றமனோபாவனைநினைக்குமிடத்துண்டோ—முடிவிற்சுகத்துவமையிலா-முடிவில்லாதவாநந்தமுடையசமானமில்லாத— உபசாந்தவுணர்வாம்-உபசாந்தஞானமாகிய—கண்ணே- (எனது) திருஷ்டியே—உலகங்கும்-சகங்களனைத்திலுமாம்—(எ-று.) (௩௨)

(ஒன்றுனதன்னைமனனஞ்செய்தல்.)

நோக்கப்பட்டநோக்கெல்லாநுண்மையறிவாநோக்கொன்றே *
யாக்கப்பட்டவுயிரனைத்துமகத்தாயறிவதிலாவறிவாய்த் ... ... *
தாக்கப்பட்டதொன்றில்லாத்தனித்தத்துவமாய்த்தனையன்றிப்...*
போக்கப்பட்டதில்லாவெம்பொருட்டுவணங்கிப்புகழுதுமால்....*

(இ-ள்.) நோக்கப்பட்டநோக்கெல்லாம் - பார்க்கப்பட்டபார்வைகளனைத்தும்—நுண்மையறிவாம்- சூட்சுமவறிவாகிய—நோக்கொன்றே-பார்வையொன்றேயாம்— ஆக்கப்பட்ட-உண்டாக்கப்பட்ட—உயிரனைத்தும்- சீவர்களியாவையும்— அகத்தாய்-அகமாகியும்— அறிவதிலாவறிவாய் - திரிஸ்யசம்பந்தமில்லாதஞானமாகியும்—தாக்கப்பட்டதொன்றிலா - தாக்குதற்குவேறொருவஸ்துவில்லாத— தனித்தத்துவமாய்- ப்ரத்தியகாத்மாவாகியிருக்கின்ற—தனையன்றிப்போககப்பட்டதில்லா - என்னையன்றிநீக்கப்பட்டதில்லாத— எம்பொருட்டுவணங்கிப்புகழுதும்-எமதுநிமித்தம்வந்தித்துத்துதிப்போம்—(எ-று.) (௩௩)

(ஆத்மாவிற்சத்திகளனைத்துமுண்டாதல்.)

அறவுநொய்தாய்ச்சமமாகியவிகாரமதாயதீதமதா ..... ... ... *
யிறவுநிகழ்வே ர்வென்னவெண்ணுங்காலமூன்றிலதாய்ப்..*
பிறவுநினைக்குநினைவின்றிப்பேதமற்றவறிவாலே ... ... ... ... *
நிறைவிதானசத்தியெலாநேரேசெய்யப்பட்டனவே ... ... ... *

(இ-ள்.) அறவுநொய்தாய்- மிகவுஞ்சொச்சமாய்— சமமாகி- சமத்துவமாய்— அவிகாரமதாய்- விகாரமில்லாததாய்— அதீதமதாய்— இறவுநிகழ்வ்வாவெதிர்வென்ன - செல்காலநிகழ்காலவருகாலமென்று— என்னுங்காலமூன்றிலதாய்- நிலைக்கிளைறமூன்றுகாலமுமில்லாததாய்— பிறவுநினைக்குநினைவின்றி- வேறாகநினைக்கின்றநினைவில்லாமல்— பேதமற்றவறிவால்- அபேதஞானத்திறல்— நிறைவிதானசத்தியெலாநேரேசெய்யப்பட்டன - மாகுநிமையானநானாவிதசத்திகளனைத்துநேரேயுண்டாக்கப்பட்டன (எ-று.

(அதீததரிசனம்.)

தாக்கற்றொன்றிலறிவுக்குச்சமமேயொழிந்துகண்டதில்லை ......*
வாக்குக்கெட்டாமையினலேவசனங்களினுற்சமந்தோன்று ..*
நோக்கத்தகரிதாம்பொய்ப்பொருள்போனொய்தாயழியாநிராசை
தனைத்தேக்கிற்சமபாவனைதானேதிரைதீர்கடல்போற்சேடிக்கும்

(இ-ள்.) ஒன்றில்- ஒன்றிலும்— தாக்கற்று- பற்றில்லாதிருக்கின்ற— அறிவுக்கு-ஞானத்திற்கு— சமமேயொழிந்து- சமமேயல்லாமல்— கண்டதில்லை-(வேறு) காணப்பட்டதில்லை— வாக்குக்கெட்டாமையினல்- வசனத்திற்கெட்டாதபடியினல்— வசனங்களினுற்சமந்தோன்று - வார்த்தைகளினுற்சமமானவாத்மாதோன்றமாட்டாது— நோக்கத்தகரிதாய்- பார்ப்பதற்கரிதாகியும்— பொய்ப்பொருள்போல்-மித்தையாகியவஸ்துவைப்போல— நொய்தாகி சொச்சமாகியுமிருக்கின்ற— அழியாநிராசைதனை - கெடாதநிராசையை— தேக்கில்- நிறைத்தால்— சமபாவனைதானே - சமபாவனையானது— திரைதீர்கடல்போல்- அலையில்லாதசமுத்திரத்தைப்போல— சேடிக்கும்- மிஞ்சும்—(எ-று.) (௯௫)

(பந்தமடையுமுயிர்களுக்கிரங்கல்.)

செயலுஞ்செயலிலாமையுமாய்த்தியங்குஞ்செயலிற்சேரறிவு ...*
பயிலும்வலையிற்புட்போலப்பந்தமடையுமாதலினன் ........*
மயல்வெங்கோபமிரண்டாலும்வருந்தொந்தனையாமயக்காலே.*
யுயிர்களெல்லாநிலைப்புழுட்போலொன்றுமகலாதாகுவதாம்....*

(இ-ள்.) செயலுஞ்செயலிலாமையுமாய்- தொழிலுந்தொழிலில்லாமையுமாகி-- தியங்குஞ்செயலில்-மயங்குகின்றதொழில்களில்— சேரறிவு- சேர்ந்தவறிவானது — பயிலும்வலையிற்புட்போல- கூறும்வலையிலகப்பட்டபக்ஷியைப்போல— பந்தமடையும்-கட்டுப்படும்— ஆதலினல்- ஆகையினல்— மயல்வெங்கோபமிரண்டாலும்- இராகத்துவேடமாகியவிரண்டிஞலும்— வருந்தொந்தனை

ராம்-வருகின்றதொந்தமான--மயக்கால்-மயக்கத்தினால்—உயிர்யெல்லாம்- சீவர்களனைத்தும்—நிலப்புழுப்போல்-பூமிக்குள்ளிருக்கின்றகிருமியைப்போல—ஒன்றுமகலாதாகுவதாம் - ஒன்றுநீங்காமலாகும்—(எ-று.) (௧௬)

(தன்னைத்தானாய்த் துதித்தல்.)

நீடத்தகுமன்னுயிர்க்கெல்லாநெஞ்சத்துறைவாய்நெடுநாளாக் *
கூடப்பெற்றேனுனையிந்தக்குறையில்பேற்றையார்பெற்றார்... *
தேடப்பட்டாய்ப்பெறப்பெற்றாய்த்தெரியநின்றாய் விகற்பமெலாம்
வீடப்பட்டாயெதுவானாயதுவாய்நின்றாய்மிகத்துதிப்பாம்... *

(இ-ள்.) நீடத்தகும்-மிகவுந்தெளிவாக—மன்னுயிர்க்கெல்லாம்- நிறைந்தவாத்மாக்களனைத்திற்கும்—நெஞ்சத்துறைவாய்-மனதிலுறைபவனே—நெடுநாள்-வெகுகாலத்தின் (பின்பு)—உனைக்கூடப்பெற்றேன்- உன்னையடையப்பெற்றேன்—இந்தக்குறையில்பேற்றை- இப்பூரணப்ரயோசனத்தை—யார்பெற்றார்- யார்பெற்றார்கள்--தேடப்பட்டாய்- (சுருதிகுருவாக்கியங்களினால்) விசாரிக்கப்பட்டாய்—பெறப்பெற்றாய்- (கூடஸ்தபிரமவயிக்கியத்தை)யடையப்பெற்றாய்—விகற்பமெலாம்- வேற்றுமைகளனைத்தையும்—வீடப்பட்டாய்-நீக்கினாய்—தெரியநின்றாய்- சச்சிதாநந்தஸ்வரூபமாகப்ரகாசிக்கின்றாய்—எதுவானாய்-யாதானாயோ--அதுவாய்நின்றாய் - அதுவாகநின்றவுன்னை — மிகத்துதிப்பாம்- மிகவுந்தோத்திரஞ்செய்வோம்—(எ-று.) (௧௭)

(ஐகியவஸ்துவானதன்னைத் தரிசித்தல்.)

நானேநீயாய்நீநானாய்ஞானவடிவாய்முடிவின்றித் ........... *
தானேயாகியண்டத்தின்றலையாய்ப்பரமதத்துவமாங்கோனேயு
ன்னைத்தொழுகின்றேன்கொண்டன்மறையாநிறைமதிபோல், வூ
னேர்நினைவுகளின்மறையாவொளியாமுருவேயுனைப்பணிகேன் *

(இ-ள்.) நானேநீயாய்- நானேநீயாகியும்—நீநானாய்- நீயேநானாகியும்—ஞானவடிவாய்-ஞானஸ்வரூபமாகியும்—முடிவின்றித்தானேயாகி - முடிவில்லாதுதான்மாத்திரமாகியும்—அண்டத்தின்-அண்டத்தி(லுள்ளதேவர்களுக்கு)—தலையாய்- தேவனாகியுமிருக்கின்ற— பரமதத்துவமாம்- பரமாத்மாவான— கோனே-இறைவனே— உன்னைத்தொழுகின்றேன் - உன்னைவணங்குகின்றேன் —கொண்டன்மறையா - மேகங்களின்மறையாத—நிறைமதிபோல்-பூர்ணசந்திரனைப்போல—ஊனேர்நினைவுகளின்மறையா-ஈனமான நினைவுகளின்மறைபடாத—ஒளியாமுருவே-ப்ரகாசஸ்வரூபமே--உனைப்பணிகேன்-உன்னைவந்தனஞ்செய்வேன் (எ-று.)
(௧௮)

ற்றுவிதபாவனைவிட்டு—அசையாநிலைக்கு-அசைவற்றநிலையில்—
தனிக்கேவலநின்றேன்-ஒப்பற்றகேவலமாயிருந்தேன்—வினையா
நினைவற்று- வினையானபாவனையற்று— அகங்கரம்போய்- அகம்
பாவநீங்கி—மேவுமனம்போய்-பொருந்தாநின்றமனம்போய்--
தொழிலின்றி-ஒருசெயலுமில்லாமல்—ஈனையேநிகர் - தனக்குத்
தானேசமானமான— கேவலத்தொடர்ச்சி - கேவலமாகிய— நித்
துவத்து-பரிபூரணமான ஞானாத்மாவில்—என்வழியிருக்கும் -எ
னதுஸ்வரூபமிருக்கும்—(எ-று.) (௬௩)

(அகம்பாவநீங்கியைக்கியமானேனெனல்.)

காதலென்னுங்கட்டறுத்துக்காயமென்னுங்கூடகன்று.........*
சாதன்மேவுமகங்கரமாந்தனிப்புள்ளெங்கேபறந்ததோ ...*
யேதமறுநீநானுநீயென்னுமொருமையிருமையதா .........*
யோதும்விதியான்மீண்டொன்றியுயர்நீநானுனீயானேனம்... ...*

(இ-ள்.) காதலென்னுங்கட்டறுத்து-ஆசையென்கின்ற பந்தத்
தைக்கெடுத்து—காயமென்னுங்கூடகன்று - சரீரமென்னுங்கூ
ண்டைநீங்கி--சாதன்மேவுமகங்கரமாம்-இறப்பையடைகின்றவக
ம்பாவமென்னும்—தனிப்புள் - தனித்தபக்ஷியானது—எங்கே
பறந்ததோ-எங்கேபறந்துபோயிற்றோ—ஏதமறுநீநான் -குற்ற
மற்றநீயேநானாகும்— நானீயென்னும்- நானேநீயாகுமென்கின்
ற — ஒருமையிருமையதாய்-ஒன்றிரண்டாக— ஓதும்விதியான்மீ
ண்டொன்றி - கூறும்நியதியினாற்றிரும்பவு மொன்றாய்—உயர்நீ
நான்- மேலானநீயேநானாகவும்— நானீ- நானேநீயாகவும்— ஆ
னேம்-அயிக்கியமானோம்—(எ-று.) (௬௪)

(ஆத்மாவைவாழ்த்துதல்.)

ஒழிவிலுலகின்சீரெல்லாமுண்டாயிருந்துநீயிலையேல்.........*
விழியிலவர்க்குப்பேரொழில்கூர்மின்னைப்போல்விளங்காதால்*
வழுவிறேவசயசாந்திமன்னுமிடமேசயபேத ... ... ......*
முழுதுக்கபலேசயவேதமுளைத்தவிடமேசயவென்றே.........*

(இ-ள்.) ஒழிவிலுலகின்சீரெல்லாம்- நீங்காதசகத்தின்செல்வங்
களனைத்தும்—உண்டாயிருந்தும்-உடையதாயிருந்தும்—நீயிலை
யேல்-நீயில்லாமற்போனால்— விழியிலவர்க்கு-கண்ணில்லாதவர்க
ளுக்கு—பேரொழில்கூர்- பெரிதானவழகுமிகுந்த—மின்னைப்
போல்-ஸ்திரீகளைப்போல—விளங்காது - ப்ரகாசிக்கமாட்டாது
—வழுவிறேவசய - நாசமில்லாததெய்வமேசய — சாந்திமன்
னுமிடமேசய-உபசாந்தம் பொருந்துமிடமேசய— வேதமுழு

ருக்கடலேசய-வேதங்களனைத்திற்குமதிதமானதேசய—வேதமு ழுத்த-வேதங்களுண்டான--இடமேசயவென்று- ஸ்தானமேசயவென்று—(எ-று.) [இ-ய்சு-க-ம்] விசாரத்திலுதித்த ஸ்வானுபூதியை மனனஞ்செய்ததை நிதித்தியாஸ்த்தில் காட்சிப்படுத் திருந்ததென்பதாம். (சரு)

(சமாதியடைதல்.)

பிறக்குமுதலேசயவென்றும்பிறவாமுதலேசயநானு ....... *
மிறக்குமுதலேசயவென்றுமிறவாமுதலேசயமென்று.. ...... *
சிறக்குமனத்தாற்சிந்தித்துச்செம்பொற்பெயரோன் றிருமதலை
பறக்கும்விகற்பமில்லாதபரமசமாதிச்சுகமுற்றான்.... ...... [ப்

(இ-ள்.) பிறக்குமுதலேசய - உண்டாகுங்காரணமேசய— என்றும்பிறவாமுதலேசய- எப்பொழுது முண்டாகாத காரணமேசய—நானுமிறக்குமுதலேசய- எந்நாளுமிறக்கின்ற காரணமேசய—என்றுமிறவாமுதலேசய- எப்போது மிறவாதகாரணமேசய-- என்று- (இப்படி) யென்று—சிறக்குமனத்தாற்சிந்தித்து- சிறக்கின்றமனநிறுத்தியானித்து--செம்பொற்பெயரோன் றிருமதலை -இரணியனையழகியபுத்திரன் — பறக்கும்விகற்ப மில்லாத பரமசமாதிச்சுகமுற்றான்- பரவியபேதமற்ற மேலானநிருவிகற்பசமாதியினானந்தத்தையடைந்தான்—(எ-று.) (சசு)

(சமாதியனுபவத்தைக்காண்டல்)

நிருவிகற்பசமாதியிலேநிகழ்சித்திரம்போனிலைபெற்று. ... ...*
வருடமையாயிரஞ்செலமாறுவொருபார்வையினிற்ப ... ....*
வருணமணிசூழ்பாதலத்திலரசிலாமலசுரரொலாங். ... ... ... ...*
கருடன்முதற்புள்ளினங்கவறக்கலங்குகுளமீனினமொத்தார்....*

(இ-ள்.) நிருவிகற்பசமாதியில்- நிருவிகற்பமானசமாதியில்—நிகழ்சித்திரம்போல்- ப்ரகாசிக்கின்றசித்திரத்தைப்போல— நிலைபெற்று-திரமடைந்து—வருடமையாயிரஞ்செல்ல- ஐயாயிரவருடங்கழிய—மாறுவொருபார்வையினிற்ப - மாறுதலொரோதிருஷ்டியிலிருக்க—அருணமணிசூழ்- மாணிக்கங்கள்சூழ்ந்திருக்கின்ற பாதலத்தில்- பாதாளலோகத்தில்—அரசில்லாமல்- வேந்தனிலலாமல்—அசுரரெல்லாம்- அவுணர்களனைவரும்— கருடன்முதல்- கழுழன்முதல் -புள்ளினங்கவர - பறவைக்கூட்டங்கள்கிரிக்க—கலங்குகுளமீனினமொத்தார்- கலங்காநின்ற தடாகத்திலுள்ள மகஷங்களின் கூட்டத்துக்குச் சமானமானார்—(எ-று.) [இ உ-க-ம்] ஸ்வானுபூதிமாத்திரமாய் விளங்கினானென்பதாம். (சஎ)

(திருமால்சகநிலையையாலோசித்தல்.)

ஆவதாயகாலத்திலனைத்தாமுலகினெறியனைத்துங் ......... *
காவல்புரியுந்திருநெடுமால்கடல்வாய்விழித்துக்கண்வளர்வான் ..*
தூவல்வருடக்காரிடியின்றுயிலைத்தவிர்த்துவொருகாலைச்......*
சேவல்கூருந்திருவுளத்திற்சகத்தினையேசிந்தித்தான்.....*

(இ-ள்.) ஆவதாயகாலத்தில்- இப்படியானகாலத்தில் — அனைத்தாமுலகின் - சகலமாகியசகங்களினது — நெறியனைத்தும் - நீதிவிடாமையும் — காவல்புரியும் - இரட்சிக்கின்ற — திருநெடுமால் - ஸ்ரீவிஷ்ணுவானவர் — கடல்வாய் - திருப்பாற்கடலில் — விழித்துக்கண்வளர்வான் - அறிதுயிற்செய்து — தூவல்வருடக்காரிடியின் - துளிக்கின்றமழையையுடைய கார்காலத்திற்செய்யும் — துயிலைத்தவிர்த்து - நித்திரையைநீக்கி — ஒருகாலை - ஒருக்கால் — சேவல்கூருந்திருவுளத்தில - இரட்சிப்புள்ள திருவுள்ளத்தில் — சகத்தினையே - உலகத்தினடக்கையை — சிந்தித்தான் - ஆலோசனைசெய்தான் — (எ-று.) (௪௮)

(இதுவுமது.)

பேதமில்லாச்சாந்திபதம்பிரகலாதன்பெற்றிருப்ப. ........ *
வேதன்சிருஷ்டியழிந்துளவால்வெவ்வாளசுரரிலாமையினால்.. ..*
ஏதவசுரரில்லையெனவிகலற்றிமையோரெல்லோரும். ... ... *
போதவுபசாந்தியராகிப்பொருவில்வீடுபொருந்துவரால்......*

(இ-ள்.) பேதமில்லா - வேற்றுமையில்லாத — சாந்திபதம் - உபசாந்தபதத்தை — பிரகலாதன் பெற்றிருப்ப - பிரகலாதனடைந்திருக்க — வேதன்சிருஷ்டி - பிரமதேவன் சிருஷ்டியானது — அழிந்துள - அழிவுற்றன — வெவ்வாளசுரர் - கொடியவாளையுடைய நிசாசரர்கள் — இலாமையினால் - இல்லாததினால் — ஏதவசுரரில்லையென - குற்றமுள்ளதானவர்களில்லையென்று — இகலற்றிமையோரெல்லோரும் - போரற்றதேவர்களனைவரும் — போதவுபசாந்தியராகி - மிகவுமுபசமமடைந்து — பொருவில்வீடுபொருந்துவர் - ஒப்பற்றமோக்ஷமடைவார்கள் — (எ-று.) (௪௯)

(இதுவுமது.)

தேவருபசாந்தியையடையிற்செந்தீவேள்விதவமெல்லாம்......*
போவதாகிப்பயனெல்லாம்பொருந்தாதெனவும்பொன்றிடுமா,
லோவலுற்றகிரியையெலாமொழிந்தாற்பூமியொடுங்கிடுமாற்...*
சேவலத்திற்புவியொடுங்கிற்கிளருஞ்சிருட்டியற்றிடுமால்..... ...*

(இ-ள்.) தேவருபசாந்தியையடையில் - அமரர்களுபசாந்தத்தையடைந்தால்— செந்தீவேள்வி- (பூமியிற்) சிவந்தநிலை (முன்னிட்டுச்செய்கின்ற) யாகங்களும்—தவமெல்லாம்- தவங்களனைத்தும்—பேதவதாகி-கெடுவதாய்—பயனெல்லாம்- ப்ரயோசனங்களனைத்தும்—பொருந்தாது - பொருந்தாமல்—எவையும்பொன்றிடும்-எல்லாநசிக்கும்— ஒவ்வொன்றிகரியையெலாம்- ப்ரயாசமாகச்செய்யப்பட்ட யாகாதிகிரியைகளனைத்தும்— ஒழிந்தால்-நீங்கினால்—பூமியொடுங்கும்- சகமானதடங்கும்— கேவலத்திற்புவியொடுங்கில்- தனிமையிற்சகமடங்கினால்— கிளர்ச்சிருட்டியத்திடும்- விளங்குகின்றசிருஷ்டியழிந்திடும்—(எ-று.) (ருώ)

( இதுவுமது. )

இன்னசிருட்டிசூனியமாயிரவிமதியோடெலாமிறக்கிற் ...... *
பின்னரியாரும்வழிவொழிந்துப்பேதமில்லாப்பதமடைவோம்*
சொன்னகாலத்தலாதிடையேதொல்லுலகமெலாமிறக்கி ....*
லுன்னநலன்காண்கிலமிதனுக்குறுதியுபாயமுணர்ந்தனமால் ..*

(இ-ள்.) இன்னசிருட்டிசூனியமாய் - இப்படிப்பட்டசிருஷ்டியில்லாமல்—இரவிமதியோடு- சூரியசந்திரர்களோடும்—எலாமிறக்கின்-யாவுமிறந்தால்—பின்னர்- பின்பு—இயாரும்வழிவொழித்து-நாமும் (மிந்த) வுருவத்தைவிட்டு— பேதமில்லாப்பதமடைவோம்-பேதமற்ற(தற்)பதத்தையடைவோம்— சொன்னகாலத்தலாது-நியமித்தகாலத்தைவிட்டு—இடை - மத்தியில்— தொல்லுலகமெலாமிறக்கில்- (பழமையான) சகங்களனைத்துநாசமானால்— உன்ன-நினைக்க—நலங்காண்கிலம் - நன்மையைக்கண்டிலம்—இதனுக்குறுதியுபாயம்-இதற்குத்திரமானவுபாயத்தை— உணர்ந்தனம்-அறிந்தனம்—(எ-று.) (ருக)

( இதுவுமது-வேறு. )

தானவருய்கவுய்ந்தாற்சமருண்டாஞ்சமருமுண்டேல்... .. ...*
வானவருண்டாமுண்டேன்மகந்தவமுண்டாமுண்டே... .... ...*
லானதோர்சிருட்டியுண்டாமன்றெனிற்சிருட்டிமாளு... ......*
மூனமிலசுரர்கோனிவ்வுடலொடுமூழிவாழ்க .. ....... ..... *

(இ-ள்.) தானவருய்க- அசுரர்கள்வாழக்கடவது — உய்ந்தால்-வாழ்ந்தால்—சமருண்டாம்-யுத்தமுண்டாகும்— சமருமுண்டேல்-யுத்தமுமுண்டானால்—வானவருண்டாம்-தேவர்களுண்டாவார்கள்— உண்டேல்- (தேவர்க)ளுண்டானால்—மகந்தவமுண்டாம் யாகமுந்தவசுமுண்டாகும்—உண்டேல் - (அவைக) ளுண்டானு

ஸ்—ஆனதோர்சிருட்டியுண்டாம்- ஆகியவொப்பற்றசிருஷ்டியுண்டாகும—அன்றெனில-(இவைக)ளெல்லாவிடின் — சிருட்டிமாரும்-சிருட்டியுங்கெடும் (மாதலால்)- -ஊனமில்சுரர்கோன் -குறைவற்ற அசுரேந்திரனாகிய (பிரகலாதன்)—இவ்வுடலொடும் - இச்சரீரத்தோடுமே—ஊழிவாழ்க - ஊழிகாலம்வாழக்கடவன்—(எ-று.)

(இதுவுமது.)

பரமமாமீசனாலேபாலிக்குங்கடவுணீதி.... ... ... ... ... ... *
திரமுறவிவ்வாறென்றுசிந்தித்தசெங்கண்மாய... ... ... ... ... *
னரவணைப்பாயனீங்கியசுரர்கோனருகுசேர்ந்தான். .... ... ... *
பிரமலோகத்தையொக்கும்பெரியபாதலநகர்க்கே.... ... ... *

(இ-ள்.) பரமமாமீசனால்- பரமேஸ்வரனால்—பாலிக்குங்கடவுள்- இரட்சிக்கின்றதெய்வநீதியானது—திரமுற- ஸ்திரம்பொருந்தும்படி—இவ்வாறென்று-இந்தப்ரகாரஞ்செய்யவேண்டுமென்று—சிந்தித்தசெங்கண்மாயன் - சிந்தனைசெய்த சிவந்தகண்களையுடைய விஷ்ணுவானவர்—அரவணைப்பாயனீங்கி - சர்ப்பசயனத்தைவிட்டு—பிரமலோகத்தையொக்கும் பெரியபாதலநகர்க்கு-சத்தியலோகத்தையொத்த பெரிதான பாதாளலோகத்தில—அசுரர்கோனருகுசேர்ந்தான்-அசுரர்க்கரசனான பிரகலாதனது சமீபத்திலடைந்தார்—(எ-று.) [இ-சு-க-ம்] சீவன்முத்தனான பிரகலாதன் விதேகமுத்தியையடைந்தாற் பரமேஸ்வரநியதி தவறிப்போமென் றாலோசித்தவனப்போதுஞ் சீவன்முத்தனாயாகியிருக்கும்படி மனதிற்சிந்தித்தவனிருக்குமிடத்துக் கெழுந்தருளினானென்பதாம். (௫௩)

(சமாதியினின்றுஞ் சாக்ஷாத்காரத்துக்குவெளிப்படுத்தல்.)

வேறு.

கருடவாகனத்துறைபவன்கவரிசேர்செங்கைத்... ... ... ... ... *
திருமடந்தைவாழ்வலத்தினனைம்படைசெறியு... ... ... ... ... *
மிருபுறத்தினன்றேவருமுனிவருமிறைஞ்ச. .... ... ... ... ... *
வருணநாயகனசுரனைப்புணர்ந்தியென்றருளி.... .. ... ... ... ... *

(இ-ள்.) கருடவாகனத்துறைபவன்- கருடவாகனத்தில்வசிப்பவனும்—கவரிசேர்- வெண்சாமரஞ் சேர்ந்திருக்கின்ற—செங்கைத்திருமடந்தை-சிவந்தகரங்களையுடையலக்ஷுமி— வாழ்வலத்தினன்-வாழ்கின்ற வலதுபக்கத்தை யுடையவனும்—ஐம்படைசெறியும்- பஞ்சாயுதங்களினைந்த—இருபுறத்தினன் -இருபுறத்தை

